நியூட்ரின்

# பழரச விருந்து!



இலவசம்!

ஆனந்த ஆர்ப்பாட்டத்திற்கு நியூட்ரின் ஃபுரூட் ரோல். இதன் 4 ராப்பர்களை 'ராப்பர் ஃபன்', 10, லீத் காசல் ரோடு, சாந்தோம், சென்னை-28 க்கு அனுப்பி ஒரு கால அட்டவணையை (Time Table) இலவசமாகப் பெறுங்கள்!

நியூட்ரின் ஃபுரூட் ரோல் இந்த சலுகை இல்லாமலும் கிடைக்கும்.




HARMONY - 181/95 - Tam

# மங்கை

ஆகஸ்ட் 1995

**முழுக்க முழுக்க வண்ணத்தில்...**



வீட்டுக் குறிப்புகள், வண்ணக் கோலங்கள்,
மற்றும்
பயனுள்ள கட்டுரைகள்.

**விலை ரூ.8/—**




## ASWINI HOMEO HAIR OIL

- ✱ Stops falling of hair.
- ✱ Prevents premature greying.
- ✱ Helps rich growth.
- ✱ Provides cooling effect to the brain.
- ✱ Non-Sticky.




## ASWINI MUSCLE OIL

- ✱ Relieves joint pains
- ✱ Relieves back aches
- ✱ Relieves muscle pains
- ✱ Relieves body pains and sprains




## ASWINI HERBEL BATH POWDER

- ✱ Cleanses sweat pores and keeps you fresh.
- ✱ Lends muscle strength.
- ✱ Preserves body - balance.
- ✱ Prevents pimples and wrinkles.
- ✱ Keeps yours skin healthy and soft.

*Lakhs are using Aswini Products why not you also try ?*

ANJU ADS

**ASWINI HOMEO & AYURVEDIC PRODUCTS LTD.,**

Moosapet, Hyderabad - 500 018. India

Phone : 273430 & 273607. Fax : 040-272409

# கீச்சிட்டுக் குரலெழுப்பும் மழலைச் செல்வங்களுக்கு எலெக்ட்ரானிக் பக்க வாத்தியங்கள்.

இதோ, அத்தனையும் இங்கே! பன்னாட்டு ரகங்கள். பாதுகாப்பான
எலெக்ட்ரானிக் பொம்மைகள். பாடும், ஆடும், நடக்கும், பேசும், கீச்சிடும்,
தாவி ஏறும் – மம் டாய்ஸ் அளிக்கும் பொம்மைகள். உங்கள் வீட்டின்
அந்த இளஞ்சிட்டுக்கு முற்றிலும் ஏற்றவை.



**ராப் டான்ஸர்**
எதிர்கால வெற்றி நாயகர்களுக்கு எளிதில்
தரும் உற்சாகம்.





**பர்த்டே கேக் பியானோ**
அந்தப் பிஞ்சு நெஞ்சத்திற்கு பிறந்தநாள்
வாழ்த்து இசைகள்.



**பவர் சாசர் டாப்**
விண்வெளி யுகத்தின் சுழற்சி. புதுயுகச்
சிறார்களுக்கு மகிழ்ச்சி.



**பியானோ பென்சில் பாக்ஸ்**
மழலை மொழி பாடுவோர்க்கு
இன்னிசை ஒலி.



**ராப் கேசட்**
வருங்கால மைக்கேல் ஜாக்ஸன் சின்னப்
பாதங்களும் தாளம் போட, இயக்கும் இசை.




HEAD OFFICE: M.M.Toys Industries Ltd., 5, Chandra Bagh Avenue, Mylapore, Madras-4. Ph: 835151, Fax: 843919.

8018.96




# அம்புலிமாமா

*நிறுவனர்: 'சக்கரபாணி'* *நிர்வாக ஆசிரியர்:* நாகிரெட்டி

## வகுப்பில் விளையாட்டு!



**வி**ளையாட்டு என்றதும் பரந்த விளையாட்டு மைதானமே நினைவிற்கு வரும். ஸ்டேடியம், உள்ளே விளையாடும் விளையாட்டுகள் என்று கேள்விப்பட்டிருக்கிறோம். வகுப்பில் விளையாட்டா என்று கேட்கிறீர்கள்? ஆம். இனி விளையாட்டு என்பதும் வரலாறு, வணிகவியல் போல ஒரு பாடமாகச் சேர்க்கப்பட இருக்கிறது.

பள்ளிகளில் மொழிகள், விஞ்ஞானம், வேதியல், பொருளியல், வணிகவியல் என்பன பாடங்களாகக் கற்பிக்கப்படுகின்றன. சில பள்ளிகளில் இசை, நடனம், ஓவியம் என்றெல்லாம் கற்பிக்கப்படுகின்றன. ஆனால் இவற்றிற்கிடையே விளையாட்டிற்கென சிறிது நேரம் ஒதுக்கப்பட்டு மாணவர்கள் விளையாட அனுமதிக்கப்படுகிறார்கள். அந்தச் சிறிது நேரம்தான் அவர்களுக்கு எவ்வளவு மகிழ்ச்சியை அளிக்கிறது!



இனி விளையாட்டும் ஒரு விஷயமாகப் பள்ளிகளில் போதிக்கப்படும் என ஒரு மத்திய அமைச்சர் கட்டக்கில் அண்மையில் கூறினார். முதலில் இது கேந்திரிய வித்தியாலயங்களிலும், நவோதயப் பள்ளிகளிலும் புகுத்தப்படும்.

விளையாட்டை பாட விஷயமாக்கி விளையாட்டு விதிகளையும், ஆட்ட கோஷ்டிக் கட்டுப்பாடுகளையும் போதித்து, விட்டுக்கொடுத்து பாராட்டும் மனப்பான்மையையும் வளர்ப்பதால் இது வரவேற்கத்தக்கதே!

**மதிமுகம்: 97** **ஆகஸ்ட் 1995** **புன்னகை: 2**

**தனிப்பிரதி: ரூ.5.00** **வருட சந்தா: ரூ.60.00**



செய்திகளும் தகவல்களும்

# அட்லாண்டிக் மகாசமுத்திரத்தில் குட்டி இந்தியா

இந்தியக் குடியரசுத் தலைவர் டாக்டர் சங்கர் தயால் சர்மா அண்மையில் சிறப்பு அழைப்பின் பேரில் கரீபியன் நாடான ட்ரினிடாட்-டோபாகோவிற்கு முக்கிய விருந்தினராகச் சென்றார். 150 ஆண்டுகளுக்கு முன் முதன் முதலாக இந்தியர்கள் அங்கு சென்றதை நினைவுபடுத்தும் விழாக் கொண்டாட்டங்களில் கலந்து கௌரவப் படுத்தும்படி இந்தியக் குடியரசுத் தலைவர் வேண்டிக் கொள்ளப்பட்டார். அவரும் அதனை ஏற்று அங்கு சென்றார். இந்தியர் அங்கு முதலில் காலடி வைத்தது 1845 மே 3-ந் தேதியில்.

அமெரிக்காவைக் கண்டுபிடித்த கிரிஸ்டோபர் கொலம்பஸ் தென் அமெரிக்காவின் கிழக்குப் பகுதியிலுள்ள ட்ரினிடாட் தீவை 1498ல் அடைந்தாரென வரலாறு கூறுகிறது. அதன்பின் அது ஸ்பெயினின் குடியேற்ற நாடாகியது. 1802ல் அது பிரிட்டிஷார் வசம் வந்தது. அத்தீவினருகே இருந்த டோபாகோ தீவையும் பிரிட்டிஷார் கைப்பற்றி 1809ல் இந்த இரு தீவுகளையும் ஒரே குடியேற்ற நாடாகச் செய்தனர்.

இத்தீவுகளில் கரும்பு நன்கு விளைவது. அத்தோட்டங்களில் வேலை செய்ய பிரிட்டிஷ் தோட்ட முதலாளிகளுக்குக் கூலிகள் தேவைப்பட்டனர். அப்போது பிரிட்டிஷார் நம் நாட்டையும் ஆண்டு வந்தார்கள். எனவே கல்கத்தா, சோட்டா நாக்பூர், தென்னிந்தியா ஆகிய பகுதிகளிலிருந்து ஆட்களைத் திரட்டி தற்போதைய ட்ரினிடாட் தலைநகரான போர்ட் ஆஃப் ஸ்பெயினுக்கு அனுப்பினார்கள்.

இப்படியே 70 ஆண்டுகளில் உத்திரப் பிரதேஷ், பீகார் முதலிய மாநிலங்களிலிருந்தும் கூலியாட்கள் பிரிட்டிஷாரால் அழைத்துச் செல்லப்பட்டனர். ஆப்பிரிக்கக் குடியேற்ற நாடுகளிலிலிருந்தும் கூலியாட்கள் கொண்டு வரப்பட்டனர்.

இன்று ட்ரினிடாடிலும் டோபாகோவிலும் மொத்தம் 20 லட்சம் மக்கள் உள்ளனர். அவர்களில் இந்தியர்கள் பாதி. மீதிப் பாதி ஆப்பிரிக்கர்.

அங்குள்ள இந்தியர்கள் தம் முன்னோர்கள் பிறந்த இந்தியாவை மறந்து விடவில்லை. அவர்களும் தம் நடை, உடை, எண்ணம் ஆகியவற்றிலும் இந்தியர்கள் போலவே இருக்கிறார்கள். பழக்க வழக்கங்கள், உணவு ஆகியவற்றிலும் இந்திய முறையே கடைபிடிக்கப்படுகிறது.

அங்குள்ள ஊர்கள் கூட மதுரா, லக்னோ, கான்பூர், சந்திரநாகூர், மதராஸ், மலபார் லாண்ட்ஸ், டில்லி ரோடு, கோல்கொண்டா என்றெல்லாம் பெயரிடப்பட்டு உள்ளன.

நம் நாட்டிலிருந்து முதன் முதலில் ட்ரினிடாட் போய்ச் சேர்ந்தவரின் வம்சத்தில் வந்துள்ள சூர்ஹஸ்நாலி ''சமுத்திரம் நம்மைப் பிரித்து விட்டாலும் நம் இதயங்கள் மட்டும் அருகருகேயே உள்ளன'' என்று கூறினார். நம் குடியரசுத் தலைவரும் ''ட்ரினிடாட்-டோபாகோ மக்கள் மனமும் இந்திய மக்கள் மனமும் கலந்து ஒன்றாகி பாரத தேசம் போலாகிவிட்டது'' என்று சொன்னார்.





# மாமியார் மாறினாள்!

கொடியூரில் கோதண்டம் பெரும் பணக்காரர். அவரது இரு மகன்களான பெரியசாமியும் சின்னசாமியும் கெட்டிக்காரர்கள். திறமை மிக்கவர்களும் கூட. ஆனாலும் கோதண்டத்தின் மனம் நிம்மதி அடையவில்லை. அதற்குக் காரணம் அவரது மனைவி பார்வதிதான்.

பார்வதி யாரிடத்திலும் எதையாவது சொல்லி அவரது மனதை நோகடிப்பாள். அப்படிச்செய்வது அவளுக்குப் பழக்கமாகப் போய் விட்டது. அதனால் தன் உறவிலேயே அதுவும் பார்வதியின் சகோதரனின் மகளை மண முடித்து வைத்தால் மருமகளோடு சண்டை போடாமல் இருப்பாள் என நினைத்தார். கோதண்டம் தன் மூத்த மகனுக்குத் தன் மைத்துனனின் மகள் மீனாவையே மண முடித்து வைத்தார். தன் தம்பியின் மகள்தானே என பார்வதி மீனாவிடம் பாசமாக இருப்பாள் என எண்ணினார். ஆனால் பார்வதியின் போக்கு மாறாமல் போகவே மீனா தன் அத்தையின் கடும் சொற்களைக் கேட்டுக் கொண்டிருக்க விரும்பாமல் தன் கணவனிடம் இனித் தனிக் குடித்தனம் போனாலே தான் அவனோடு வாழ முடியும் என்று கூறித்தன் பிறந்த வீட்டிற்குப் போய் விட்டாள்.

மீனா தன் தந்தையிடம் இனித் தான் தன் மாமியாரோடு சேர்ந்து குடித்தனம் செய்ய முடியாது எனக் கூறினாள். அவனும் தன் மகளிடம் ''மீனா! நீ உன் கணவனோடு வாழாமல் இங்கு எவ்வளவு நாட்கள் இருக்க முடியும்? வா, இதற்கு வழி செய்கிறேன்'' என்று கூறி அவளைக் கொடியூருக்கு அழைத்துச் சென்றான்.

கோதண்டமும் தன் மைத்துனனுடன் கலந்து பேசி மீனாவையும் அவள் கணவனையும் தனிக் குடித்

—பாபநாசம் சாமா—



தனம் வைத்து விட்டார். அடுத்த ஆண்டே பெரியசாமி ஒரு ஆண் குழந்தைக்குத் தந்தையானான். குழந்தைக்கும் இப்போது ஒரு வயதாகிவிட்டது. தன் பேரனோடு சேர்ந்து இருக்க முடியவில்லையே என்ற வருத்தம் கோதண்டத்திற்கு இருக்கத்தான் இருந்தது.

இப்படி இருக்கையில் கோதண்டம் அடுத்த ஊரிலுள்ள தன் நண்பர் அண்ணாமலையைக் காணச் சென்றார். அண்ணாமலை கோதண்டத்தைப் போலப் பெரும் பணக்காரர் இல்லை என்றாலும் வசதியாக வாழ்ந்து வருபவரே. அவர் கோதண்டத்தை அன்புடன் வரவேற்று அன்று தன் வீட்டில்சாப்பிட்டு வீட்டே போக வேண்டும் என்று கூறித் தன் மனைவியிடம் விருந்துசாப்பாட்டைத்தயாரிக்கவும் கூறிவிட்டார்.

நண்பர்கள் இருவரும் கூடத்தில் உட்கார்ந்து பேசிக் கொண்டிருந்தார்கள். அப்போது ஒரு புடவை வியாபாரிதன்வேலையாள்மூட்டை சுமந்து வர அங்கு வந்தான். அவன் அண்ணாமலையிடம் ''ஐயா! போன தடவை நான் வந்தபோது உங்கள் மகள் சில புது ரகச் சரிகைப் புடவைகளைக் கொண்டு வரச் சொன்னாள். அவற்றைக் கொண்டு வந்திருக்கிறேன்'' என்றான்.

அண்ணாமலையும் ''அம்மா உமா! புடவைக்காரர் வந்திருக்கிறார்'' என்று குரல் கொடுக்கவே அவளும் கூடத்திற்கு வந்து வியாபாரியைப் பார்த்தாள். அந்த வியாபாரியும் ''அம்மா! நீங்கள் கேட்ட புடவைகளைக் கொண்டு வந்திருக்கிறேன்'' எனக் கூறித் தன் வேலையாளிடம் மூட்டையை அவிழ்க்கச்சொன்னான்.

வேலையாள்மூட்டையைஅவிழ்க்கப் போனபோது உமா ''வேண்டாம். இரு. இதோ வந்து விட்டேன்'' என்று கூறிவிட்டு உள்ளே போனாள். இரண்டொரு நிமிடங்களில் அவள் சாயம் போன புடவை ஒன்றை எடுத்து வந்து ''ஐயா புடவைக்காரரே! போன தடவை சாயமே போகாது என்று சொல்லி நீங்கள் கொடுத்து விட்டுப் போன புடவை தான் இது'' என்று கூறி அவன் முன் போட்டாள். புடவை



தடவை வியாபாரியிடம் வைத்த நம்பிக்கை போய் விட்டால் அது மீண்டும் வராது. வாய் வீச்சில் சாதித்து விடலாம் என நீங்கள் நினைத்தால் அது இங்கே நடக்காது. நீங்கள் போகலாம்'' என்று கூறினாள்.

புடவை வியாபாரி இனித் தனக்கு அங்கே வேலை இல்லை எனக் கண்டு தலைகுனிந்து கொண்டு அங்கிருந்து சென்றான். அதை எல்லாம் கோதண்டம் பார்த்தும் கேட்டுக் கொண்டும் இருந்தார். அவர் உமாவிடம் ''ஆனாலும் உன்னைவிட வயதில் பெரியவரான புடவை வியாபாரியிடம் நீ அப்படிக் கடுமையாகப் பேசி இருக்கக் கூடாது'' என்றார்.

உமாவோ ''நம்மிடம் எவ்விதத் தப்பும் இல்லை. அதனால் ஏன் பயப்பட வேண்டும்? உள்ளதைச் சொல்ல வேண்டியதுதானே. குற்றம் புரியாதவன் தயங்கினால் எதிராளி அதைப் பயன்படுத்திக் கொண்டு விடுவான்'' என்றாள். அதைக் கேட்டு கோதண்டம் யோசனையில் ஆழ்ந்தார்.

அவர் அன்று மாலை தம் ஊருக்குக் கிளம்பு முன் அண்ணாமலையிடம் ''அண்ணாமலை! நான் உங்களிடம் ஒன்றைக் கேட்கலாமா?'' என்று கேட்டார். அண்ணாமலையும் ''நீங்கள் என்னிடம் கேட்பதா? ஆச்சரியமாக இருக்கிறதே. நீங்கள் கேட்டு நானா இல்லையென்று சொல்லுவேன்? தாராளமாகக் கேளுங்கள்'' என்றார்.

கோதண்டமும் ''உங்கள் மகள்

வியாபாரியின் முகம் வெளுத்துப் போயிற்று. ஆயினும் அவன் சமாளித்தவாறே ''இது நான் விற்ற புடவையா? இருக்காதே'' என்று மெதுவாக இழுத்தான்.

உமாவோ ''எல்லாம் நீங்கள் என் தலையில் கட்டினதுதான் இது. ஒரு முறைதான் நனைத்தேன். இதன் சாயம் போய் இப்படி ஆகிவிட்டது. இனிமேல் உங்களை நம்ப மாட்டேன். உங்களிடம் எந்தப் புடவையும் வாங்கப் போவதில்லை'' என்று வெடுக்கென்று கூறினாள்.

புடவை வியாபாரி ஏதோ சொல்ல முயலவே உமா குறுக்கிட்டு ''எதுவும் பேசவேண்டாம். ஒருவனுக்கு வாக்கு சுத்தம் இருக்க வேண்டும். ஒரு

உமாவை என் மருமகளாக்கிக் கொள்ள விரும்புகிறேன். உங்களுக்குச் சம்மதமா?'' என்று கேட்டார். அதைக் கேட்ட அண்ணாமலை ''இதை நீங்கள் கேட்பதா? எனக்குக் கட்டளையல்லவா இட வேண்டும்? இது எனது மாபெரும் பாக்கியமல்லவா?'' என்றார். கோதண்டமும் ''சரி. நான் ஊருக்குப் போய் என் வீட்டாரிடமும் கூறிவிட்டு முகூர்த்தத்தையும் குறித்து விடுகிறேன். மற்ற விஷயங்களான பெண் பார்த்தல் போன்றவற்றை உடனேயே செய்து விடலாம்'' என்றார்.



ஊர் போனதும் கோதண்டம் தன் இளைய மகனான சின்னசாமியிடம் விஷயத்தைக் கூறி ''உன் அண்ணி எதிர்த்துப் பேச சக்தியற்றவள். அதனால்தான் உன் தாயாரின் கை ஓங்கி இருந்தது. அதன் பலன்தான் உன் அண்ணன் தனிக் குடித்தனம் போனது. உனக்கு மனைவியாக வரப் போகும் உமாமீனாவைப் போலல்ல. அதை நான் நேரிலேயே பார்த்தேன். ஒரு புடவைக்காரன் மட்டமான புடவையை விற்று விட்டுப் போய் விட்டான். மறு முறை அவன் இன்னொரு புடவையை அவளுக்கு விற்க முயன்ற போது அவள் அவனைக் கோபித்துக் கொண்டு தன் சொற்களாலேயே அவனை வாட்டி எடுத்து விட்டாள். உன் தாயாருக்குச் சுடச்சுட பதில் கொடுத்து அவளைத் திருத்தி விடுவாள். எனக்கு உமாவின் மீது முழு நம்பிக்கை உள்ளது. அவளால் உன் அண்ணனும் அண்ணியும்கூட இந்த வீட்டிற்குத் திரும்பி வந்து கூட்டுக் குடும்பமாக வாழ்வார்கள். இது என் உறுதியான நம்பிக்கை'' என்றார்.

இதன்பின் உமாவைப் பெண் பார்க்கும் படலம், திருமணம் என்றெல்லாம் மளமளவென்று நடந்தன. இவை எல்லாம் பார்வதிக்கும் பிடித்திருந்தன. உமாவும் கணவனின் வீட்டிற்கு வந்தாள். வந்ததுமே தன் மாமியாரின் குணத்தை அறிந்து கொண்டாள். ஆனாலும் அவள் தப்பு தனது இல்லாது போனாலும் மாமியார் நொடிக்கு ஒரு தடவை கூறும் கடுஞ்சொற்களை எதிர்த்து ஒரு வார்த்தைகூடப் பேசவில்லை. அவள்



அவற்றை எல்லாம் பொறுத்துக் கொண்டது கோதண்டத்திற்கு ஆச்சரியத்தை விளைவித்தது.

தான் உமாவை அவள் வீட்டில் கண்டபோது அவள் புடவைக்காரனிடம் எப்படி வெட்டு ஒன்று துண்டு இரண்டு என்று பேசினாள்! அந்த உமாவா இப்போது பெட்டிப் பாம்பாக அடங்கிக் கிடக்கிறாள் என்று நினைத்து அவர் ஆச்சரியப்பட்டார்.

ஒருநாள் பார்வதி கோவிலுக்கு போயிருந்த போது அவர் உமாவை அழைத்து ''நீ உன் மாமியார் காரணமில்லாமல் கூறும் கடுஞ்சொற்களை எல்லாம் சகித்து வருகிறாயே இது ஏன்? அன்று புடவை வியாபாரியிடம் எப்படிக் கடுமையாகப் பேசினாய்? ஆனால் இன்று ஏன் இப்படி மாறி விட்டாய்?'' என்று கேட்டார்.

உமாவும் ''அன்று புடவை வியாபாரியிடம் அவ்வளவு கடுமையாகப் பேசினேனென்றால் அவர் எனக்கு உறவினரோ சொந்தக்காரரோ இல்லை. ஆனால் இங்கு என்னைத் திட்டுபவர் என் கணவரின் தாயார் இந்த உறவுதான் என்னை எதுவும் பேச விடாமல் செய்கிறது. இந்த உறவு நிலைக்க வேண்டுமானால் நான்பொறுமையுடன்எல்லாவற்றையும் சகித்துக் கொள்ளத்தான் வேண்டும். இந்தஉறவுவேண்டாம்என்றால் நான் கத்தரித்துக் கொண்டு போய் விடலாம். ஆனால் நான் அப்படிச் செய்ய விரும்பவில்லை. இந்த உறவு நிலைத்திருக்கவே விரும்புகிறேன்'' என்றாள்.

கோதண்டத்தின் கண்களில் நீர் நிறைத்துவிட்டது. அவர் ''உமா! நீ வயதில்சிறியவளானாலும்எவ்வளவு உயர்ந்தவள்! ஆனால் நீ இப்படி இருப்பதால் உன் மாமியார் உன்னை பயந்தவள் என நினைக்கிறாள். நீ அவளைத் திருத்துவாயென நினைத்தேன். ஆனால் நடப்பதோ வேறு. எல்லாம் அவரவர் தலை எழுத்துப் படிதான்நடக்கும்''எனக்கூறியவாறே துண்டை எடுத்துத்தோளில்போட்டுக் கொண்டு வெளியே வந்தார்.

அப்போது பார்வதி வீட்டிற்குள் நுழைந்து கொண்டிருந்தாள். கோதண்டம் அவளைப் பார்க்க விரும்பாமல்

முகத்தைத் திருப்பிக் கொண்டு சென்றார். அன்றிரவு சாப்பிடும் போதும் அதற்குப் பிறகும் பார்வதி உமாவை ஒருமுறை கூடக் கடிந்து கொள்ளாததைக் கண்டு கோதண்டம் ஆச்சரியப்பட்டார். அப்போது அவள் தன் கணவனிடம் ''நாளைக்கு நல்ல நாள் உங்களுக்கு எந்த வேலையும் இல்லையே?'' என்று கேட்டாள்.

கோதண்டமும் ''ஏன்? என்ன விஷயம்?'' என்று கேட்டார். பார்வதியும் தலைகுனிந்தவாறே ''நாம் இருவரும் போய் பெரியசாமியையும் மீனாவையும் இங்கு அழைத்துக் கொண்டு வந்து விடுவோம்''என்றாள். அது கேட்டு கோதண்டம் வியந்து ''என்ன சொன்னாய்? உண்மையாகவா?'' என்று தன் காதுகளையே நம்ப முடியாமல் கேட்டார்.

பார்வதியும் ''ஆமாம்! இன்று நான் கோவிலுக்குப் போய் விட்டு வந்து வாசலில் நின்று நீங்களும் உமாவும் பேசியதை எல்லாம் கேட்டேன். இவ்வளவு நாட்களாக என் கடுஞ்சொற்களால் பிறர் மனதை எப்படிப் புண்படுத்தினேன் என்பதை அறியாமலே இருந்தேன். அதனால் அவர்களது வெறுப்பிற்கு ஆளானேன். உமா உங்களிடம் கூறியது போல சொந்தம், பந்தம் என்பதெல்லாம் பிறரிடம் காட்டும் பாசத்தால் வருவது என்பதை உணர்ந்தேன்'' என்று கண்ணீர் ததும்பக் கூறினாள்.

எதிர்பாராத விதமாகப் பார்வதியிடம் ஏற்பட்ட மாறுதலைக் கண்ட கோதண்டம் ''பேஷ். இப்போதாவது எதில் சுகம் என்பதைக் கண்டு கொண்டாயே. மாமியார் அமைதியாக இருந்தாலே ஒரு குடும்பம் சுக வாழ்வு பெறும்'' என்றார். பார்வதியும் ''இந்த சிறிய விஷயத்தை என் மூத்த மருமகள் மீனா தான் குடித்தனம் செய்ய இங்கு வந்தபோது எனக்கு எடுத்துக் காட்டி இருந்தால் சரியாகி இருக்கும். எதற்கும் நேரம் காலம் என்று ஒன்றிருக்கிறது அல்லவா?'' என்று சிரித்துக் கொண்டே கூறினாள்.



# மூன்றாவது கோரிக்கை

ஒரு கப்பல் நடுக்கடலில் மூழ்கவே அதிலிருந்தவர்களில் மூன்று பேர்கள் ஒரு மரக் கட்டையைப் பற்றி நீந்தியவாறே மனித நடமாட்டமே இல்லாத ஒரு தீவை அடைந்தார்கள். அங்கு பல பழமரங்களையும் ஒரு நதியையம் அதில் மீனகளையும் அவர்கள் கண்டார்கள். பழங்களையும் மீன்களையும் தின்று சூதாட்டம் ஆடி அவர்கள் அங்கு பொழுதைக் கழிக்கலானார்கள்.

மூவரில் ஒருவன் கிராமத் தலைவன். இன்னொருவன் விவசாயி. மூன்றாவது பேர்வழி ஒரு வேலையும் இல்லாது திரிபவன். மூவரும் கடற்கரையில் நடந்து செல்கையில் மூடியுடன் கூடிய சீசாவைக் கண்டு எடுத்தனர். வேலையற்றவன் அதன் மூடியைத் திறக்கவே அந்த சீசாவில் வெகு நாட்களாக அடைப்பட்டிருந்த ஒரு பூதம் வெளியே வந்தது.

அது ''நீங்கள் என்னை விடுவித்ததற்கு நீங்கள் மூவரும் உடனடியாக நினைப்பது நடக்கும்படி செய்கிறேன். இது ஒரு முறைதான். அதற்குப்பின் நினைப்பது நடக்காது'' என்றது.

கிராமத் தலைவன் ''ஊரில் நான் பஞ்சாயத்து செய்ய வேண்டிய பல வழக்குகள் இருப்பதால் நான் உடனே என் ஊருக்குப் போக வேண்டும்'' என்றான். விவசாயியோ ''என் வயலில் பயிரை அறுவடை செய்ய நான் போக வேண்டும்'' என்றான். வேலையற்றவனோ ''இவர்கள் போய் விட்டால் எனக்குப் பொழுது எப்படிப் போகும், அதனால் இவர்களை இங்கேயே இருக்கச் செய்'' என்றான்.

'உன் விருப்பபடி நடக்கும்' எனக் கூறிவிட்டு பூதம் மறைந்தது.






(ட்ராய் மன்னன் வர்த்தனனின் மகன் மோகனன். பிரதாபன் என்ற கிரேக்க ராஜகுமாரனின் மனைவி புவனசுந்தரியை ட்ராய் நகரத்தவன் கவர்ந்து வந்ததால் கிரேக்கர்கள் அந்நகரை முற்றுகையிட்டுப் பத்தாண்டுகள் போர் புரிந்தார்கள். முடிவில் ஒரு மரக் குதிரையின் உதவியால் கிரேக்கர்கள் ட்ராய் நாகரில் புகுந்து அதைத் தீக்கிரையாக்கினார்கள் என 'புவனசுந்தரி' என்ற தொடர்கதையில் படித்தீர்கள்.

ட்ராயின மீது படையெடுத்துச் சென்ற கிரேக்க வீரர்களில் ஒருவனான ரூபதரன் தன் நாட்டிலிருந்து கிளம்பும் போதே சோதிடர் வரமாட்டான் என்று கூறினார். அந்த இருபது ஆண்டுகளில் அவன் பத்து ஆண்டுகளை ட்ராய் நகரில் கழித்து விட்டான். மீதிப் பத்தாண்டுகளில் பல விசித்திர அனுபவங்கள் அவனுக்கு ஏற்பட்டன. அந்த அனுபவங்கள் இந்தத் தொடரில் விவரிக்கப்படுகின்றன.)

ரூபதரனின் கப்பல்கள் ட்ராய் நகரை விட்டுக் கிளம்பிய போது காற்று அவனுக்கு அனுகூலமாக இருக்கவில்லை. கப்பல்கள் தெற்கே போவதற்கு பதிலாக வடக்கே சென்றன. அவை இஸ்மரோஸ் என்ற கிகோனியர்களின் தீவை அடைந்தன.

ரூபதரனின் வீரர்கள் அத்தீவில் புகுந்து கொள்ளையடித்து கிடைத்த பொருள்களையும் பெண்களையும் தமக்குள் பங்கிட்டுக் கொண்டனர். அப்போது ரூபதரன் ''இனியும் இங்கிருந்தால் ஆபத்து. நாம் போய் விடலாம்'' என்று கூறியும் கிரேக்க வீரர்கள் அவன் பேச்சைக் கேளாமல் அங்கேயே இருந்தனர். ஏனெனில் அவர்களுக்குக் குடிக்க அற்புதமான ஒரு பானம் கிடைத்துவிட்டது. அதைக் குடித்து போதையில் இருந்தனர்.

இதற்குள் பயந்து ஓடிய கிகோனி



யர்கள் பெரும் மக்கள் கூட்டத்தைத் திரட்டிக் கொண்டு வந்து கிரேக்கர்களைத் தாக்கினார்கள். எண்ணிக்கையில் அவர்கள் கிரேக்கர்களைவிட அதிகம் இருந்ததால் கிரேக்கர்களில் பல வீரர்கள் இறந்து போனார்கள். அது கண்ட கிரேக்கர்கள் சட்டென ஓடிப் போய்த் தம் கப்பல்களில் ஏறிக் கொண்டு அந்தத் தீவை விட்டுச் சென்றார்கள்.

அவர்கள் கடலில் கொஞ்ச தூரம் போனதும் வடமேற்கு திசையிலிருந்து பலத்த காற்று வீசியது. எங்கும் கருமேகங்கள் சூழ்ந்து ஒரே இருட்டாகிவிட்டது. புயல் வேகமாக வீசிக் கப்பல்களின் பாய்களைக் கிழித்து எறிந்தது. பாய்மரத் துணிகள் கிழிந்து தொங்கவே கப்பல்கள் திசை தடுமாறின.

இனி யாரும் உயிர் தப்பப் போவதில்லை என ரூபதரன் எண்ணினான். எனவே பாய்மரத் துணிகளை அகற்றிவிட்டு துடுப்புகள் வலித்துக் கப்பல்களைச் செலுத்துமாறு அவன் தன் வீரர்களிடம் கூறினான். கப்பல்கள் கரைசேருமா என்று எண்ணி உயிரைக் கையில் பிடித்துக் கொண்டு அவர்கள் துடுப்பை வலித்துக் கப்பலைச் செலுத்திக் கொண்டிருந்தார்கள்.

இரண்டு நாட்களாகியும் புயல் ஓயவில்லை. மூன்றாவது நாள் காலையில் புயலும் ஓய்ந்து சூரியோதயமும் தென்பட்டது. அப்போது அவர்கள் புதிய பாய்மரத் துணிகளைக் கட்டினார்கள். அதன் பின் கப்பல்கள் தங்கு தடை இல்லாமல் காற்றடிக்கும் திசையில் வேகமாகச் சென்றன.

நான்கு நாட்கள் சென்றபின் அக்கப்பல்கள் மலியா அக்ரா என்னும் தீவை அடைந்தன. இத்தீவின் வடக்குப் பக்கமாகச் சென்றால் ரூபதரன் தன் நாடான இதாகாவை அடைந்து விடலாம். காற்றின் வேகமும் சற்றுத் தணிந்திருந்தது. கப்பல்கள் அத்தீவின் வட திசைக்கு செல்லலாமென ரூபதரன் கட்டளை இட்டான்.

ஆனால் வேகம் தணிந்திருந்த காற்று மீண்டும் புயலாகச் சீறியது. கப்பல்களை அது கிதீரா பக்கமாக இழுத்துச் சென்றது. ஒன்பது நாட்கள் அக்கப்பல்கள் அங்கும் இங்குமாக

அடிக்கப்பட்ட பந்து போல அலைக் கழிக்கப்பட்டன. பத்தாவது நாள் கப்பல்கள் ஒரு தீவின் கரையை அடைந்தன. ஆனால் ரூபதரன் வெகு நாட்கள் வரை அத்தீவில் இருக்க முடியவில்லை.

அதற்குக் காரணம் அத்தீவில் உள்ளவர்கள் ஒருவகைப் பழங்களைத் தின்பதும் அவற்றைத் தின்பதால் தம் பழைய விஷயங்களை எல்லாம் மறந்துப் போவதுதான். ஏதோ போதை மருந்தைச் சாப்பிடுவதற்குச் சமம்தான் அது. ஆனால் இது ரூபதரனுக்குத் தெரிந்திருக்கவில்லை.

அவனும் அவனது ஆட்களும் கரையில் இறங்கி சமையல் செய்து சாப்பிட்டார்கள். அதன் பின் ரூபதரன் தன் ஆட்களில் மூவரைக் கூப்பிட்டு அத்தீவிலுள்ளோர் எப்படிபட்டவர்கள் எனக்கண்டறிந்து வரும்படி அனுப்பினான். அவர்கள் தீவினுள் சென்றதும் அங்குள்ளவர்கள் அவர்களுக்கு எவ்விதத் தீங்கும் இழைக்காமல் தாம் சாப்பிடும் பழங்களை அவர்களுக்குக் கொடுத்தார்கள். அதை சாப்பிட்டதும் ரூபதரனின் ஆட்கள் தம் வேலையை மறந்து ஆடிப்பாடித் திரிந்தார்கள்.

வெகு நேரமாகியும் தான் அனுப்பியவர்கள் வராமல் போகவே ரூபதரன் சிலரைக் கூட்டிக் கொண்டு அவர்களைத் தேடிச் சென்றான். அப்போது என்ன நடந்தது என்று அவனுக்குத் தெரிந்துவிட்டது. அங்குள்ளவர்கள் ரூபதரனுக்கும் அப்பழங்களைத்



தின்னக் கொடுத்தார்கள். அவன் அவற்றைத் தின்னவில்லை.

இனியும் அத்தீவில் இருப்பது சரியல்ல என நினைத்து ரூபதரன் தன் ஆட்களை அழைத்துக் கொண்டு கடற்கரைக்கு வந்தான். தம் ஆட்களிடம் அத்தீவில் கிடைக்கும் எதையும் சாப்பிடக் கூடாது என்று எச்சரித்தான். விரைவிலேயே அத்தீவை விட்டும் அவர்கள் கிளம்பி விட்டார்கள்.

அவர்களது கப்பல்கள் இரண்டொரு நாட்களில் இன்னொரு தீவை அடைந்தன. அப்போது ரூபதரன் ''யாரும் கப்பலை விட்டு இறங்காதீர்கள். முந்தையத் தீவில் கண்டது போல இங்கும் ஏதாவது அதிசயப் பொருள் இருக்கும். எனவே எச்சரிக்கையாக



தீவைப் பற்றி எதுவும் அறியாமல் இங்குதங்குவது ஆபத்தே. இங்குள்ள பழங்களும் நாம் முன் கண்ட தீவில் இருந்த பழங்களைப் போலப் போதை தருவதாக இருந்தால் இங்கே தங்க முடியாதே. நன்றாக யோசித்துப் பாருங்கள்'' என்றான்.

அவர்களும் ''சரி. நீ உன்னோடு ஒரு சிலரையும் அழைத்துக் கொண்டு போ. இத்தீவைப் பற்றிய விவரங் களை அறிந்து கொண்டு விரைவி லேயே வந்து விடு. எல்லாம் சரியாக இருந்தால் நாம் இங்கேயே இருந்து விடலாம். அப்படி இல்லாவிட்டால் நாம் உடனேயே கிளம்பி விடலாம்'' என்று கூறினார்கள்.

ரூபதரனும் தன்னோடு சிலரை அழைத்துக் கொண்டு கிளம்பினான். அவர்களைத் தவிர வேறு யாரும் கப்பலிலிருந்து கரை இறங்க வில்லை. கப்பலில் இருந்தபடியே அத்தீவில் என்னென்ன இருக்கின்றன என்று பார்க்கலானார்கள். வெகு தூரத்தில் மனிதர்கள் வசிக்கும் அறி குறிகள் தென்பட்டன. மாலையான தும் அங்குள்ள வீடுகளிலிருந்து புகை வந்து கொண்டிருந்ததைக் கொண்டு அங்குள்ளவர்கள் அப்போது அடுப்பை மூட்டிச் சமையல் செய்து கொண்டிருக்கிறார்கள்என்று தெரிந்து கொண்டார்கள்.

சற்று தூரத்தில் ஆடுகள் கத்துவதும் அவர்களது காதில் விழுந்தது. ரூப தரன் தன் ஆட்களிடம் அந்த இரவு

இருக்க வேண்டும்'' என்றான்.

அவர்களோ ''நாங்கள் வர வில்லை எங்களை இங்கேயே இப் படியே விட்டு விட்டுப் போய் விடு. நாங்கள் இங்கேயே இருந்து விடுகி றோம்'' என்றார்கள். அதைக் கேட்ட ரூபதரன் அவர்களது மனநிலையை புரிந்து கொண்டான்.

அவன் அவர்களிடம் ''இந்தத் தீவு எப்படிப்பட்டது என்று தெரிந்து கொண்ட பின் இங்கு தங்குவது பற்றி யோசிக்கலாம்'' என்றான். அவர் களோ ''வேண்டாம். நீ வேண்டுமா னால் எங்கு வேண்டுமானலும் போய்க் கொள்'' என்றார்கள்.

ரூபதரனும் ''எனக்கென்ன? நான் போய் விடத் தயார். ஆனால் இந்தத்

வேளையில் கரை இறங்க வேண்டாம் என்று கூறினான். மறுநாள் காலை அவன் அவர்களிடம் '' நான் என் படகில் போய்க் கரை இறங்கி அத்தீவில் வசிப்பவர்கள் எப்படிப்பட்டவர்கள், எப்படி வாழ்கிறார்கள், என்ன சாப்பிடுகிறார்கள் என்பனவற்றை எல்லாம் கண்டு அறிந்து கொண்டு வருகிறேன். அதன் பிறகு நாம் என்ன செய்ய வேண்டும் என்பது பற்றி யோசிக்கலாம். அதனால் நான் திரும்பி வரும் வரை கப்பலிலேயே இருங்கள்'' என்று கூறினான்.

அதன்பின் அவன் படகை இறக்கி அதில் சிலரோடு அமர்ந்து கொண்டு அதனைக் கரையை ஒட்டிச் செலுத்தினான். படகுகள் கரையோரமாகச் சென்றதும் அவர்கள் அவற்றை அங்கே நிறுத்தி விட்டுக் கரை இறங்கினார்கள். சுற்றிலும் பார்த்தால் பழ மரங்கள் இருந்தன. ஆனால் அவற்றைப் பறிக்க அவர்கள் முயலவில்லை. ஏனெனில் அது எப்படிப்பட்ட பழமோ எனச் சந்தேகித்ததே அதன் காரணமாகும். அவர்கள் சுற்றிலும் பார்த்தனர். நிலம் உழப்படாமல் இருந்தும் தானியங்கள் விளைந்திருந்தன. சற்று தூரத்தில் ஒரு உயரமான இடத்தில் ஒரு குகை இருப்பது தென்பட்டது. அதன் மீது கொடிகள் படர்ந்திருந்தன. அதைச் சுற்றி ஒரு பெரிய மதில் சுவர் இருப்பது போலவும் தென்பட்டது. அதில் பெரிய பெரிய பாறாங்கற்களும் மரத்துண்கடுளும் வைக்கப்பட்டிருந்தன.

ரூபதரன் தன் படகைச் செலுத்திக்





குப் பரிசாகக் கொடுத்தார். ஒரு கரண்டி பானத்தோடு இருபது கரண்டி தண்ணீர் சேர்த்துத்தான் சாப்பிட வேண்டுமாம். அப்போதும் அது மிக இனிப்பாயும் மணமுள்ளதாயும் இருக்குமாம்.

ரூபதரனும் அவனது ஆட்களும் குகையை அடைந்தார்கள். அதற்குள் சென்று பார்த்தபோது யாருமே அதில் இருக்கவில்லை. அது மிகப் பெரிய குகை. அதில் பல தொழுவங்கள் இருந்தன. அவற்றில் செம்மறியாடுகளும் வெள்ளாடுகளும் வயது வாரியாகப் பிடிக்கப்பட்டு அடைக்கப்பட்டிருந்தன. ஒரு பக்கம் பாலேடுக் கட்டிகள் வைக்கப்பட்டிருந்தன. பல பெரிய பாத்திரங்களில் பால் இருந்தது.

ரூபதரனோடு வந்தவர்கள் ''இந்தப் பாலேடுக் கட்டிகளை எடுத்துக் கொண்டு நாம் போவோம்'' என்றார்கள். ரூபதரன் அதற்குச் சம்மதிக்கவில்லை. எனவே அவர்கள் எவ்வளவு சாப்பிட முடியுமோ அவ்வளவுக்குச் சாப்பிட்டார்கள். அதன் பின் அந்த குகையில் வசிக்கும் மனிதனைப் பார்த்து விட்டுப் போக அவர்கள் காத்துக் கொண்டிருந்தார்கள்.

அந்த மனிதனும் கடைசியில் வந்தான். அவன் வந்ததை முதலில் ரூபதரனும் அவனது மனிதர்களும் கவனிக்கவில்லை. திடீரென ஏதோ வந்து விழவே அவர்கள் திரும்பிப் பார்த்தார்கள். அது ஒரு மரக்கட்டை.

கொண்டு போய் அக்குகைக்கு எதிரில் நிறுத்தினான். தன் படகில் வந்தவர்களில் மிகவும் தைரியசாலிகளாக உள்ள பனிரெண்டு பேர்களை அழைத்துக் கொண்டு ஒரு தோல் பையில் முன்பு அடைத்து வைத்திருந்த அற்புதப் பானத்தையும் எடுத்துக் கொண்டு கரையில் இறங்கி அந்த குகையை நோக்கிச் சென்றான்.

அந்த பானம் இஸ்மரோஸ் தீவில் அவனுக்குக் கிடைத்தது. அங்கு அவன் தாக்குதலை நடத்தியபோது ஒரு அர்ச்சகரையும் அவர் மனைவியையும் கொல்லாமல் விட்டு விட்டான். அவர் தம் நன்றியைத் தெரிவிக்க ஒரு பெரிய தோல் பை நிறைய அற்புதப் பானத்தை நிரப்பி அவனுக்

அதன்பின் அந்த மனிதன் குகைக்குள் வந்தான். அவனைக்கண்டதும் பூனை யைக் கண்ட எலிகள் போல அவர்கள் மூலைக்கு ஒருவராகப் போய்ப் பதுங் கிக் கொண்டார்கள்.

வந்தவன் பனைமர உயரம் இருந் தான். அவனுக்கு ஒரே கண். அது நெற்றியின் நடுவே இருந்தது. அவன் ஒரு பெரிய ஆட்டு மந்தையையே குகைக்குள் ஓட்டினான். அவை கொழுத்து வளர்ந்திருந்தன. அவன் பெரிய பாறாங்கல்லை எடுத்து குகை யின் வாயிலை மூடினான்.

அந்தக் கல்லை முப்பது எருதுகள் சேர்ந்து தள்ளினாலும் நகர்த்த முடி யாது. அதன் பின் அவன் அந்த ஆடு களின் பாலைக் கறந்தான். அந்த ஒற்றைக்கண் இனத்தவர் தனித்தனி யாக வாழ்ந்தனர். ஒருவர் கஷ்டங் களை மற்றவர்கள் பகிர்ந்து கொள்ள வில்லை. தனியே இருந்து ஒருவரைப் பற்றி மற்றவர்கள் அறியாமலே அவர் கள் வாழ்ந்து வந்தார்கள்.

அவர்கள் விவசாயம் செய்யாமல் ஆடுகளை மேய்த்து வாழ்ந்தனர். பார்லி, கோதுமை போன்றவை தாமே விளைந்தன. ஆண்டுக்கு ஒரு முறை இவர்கள் இத்தானியங்களைச் சேகரித்து வைத்துக் கொண்டும் பாலைக் குடித்தும் வந்தார்கள். ஆடு களும் அடர்ந்து வளர்ந்த புல்லைத் தின்று கொழுத்து வந்தன.

இவர்கள் கடற்கரை ஓரம் வசித்த போதிலும் அவர்களுக்குப் படகு கட்டத் தெரியாது. எனவே அவர்கள் அத்தீவை விட்டும் எங்கும் போன தில்லை. கிரேக்கர் புகுந்த குகையி லிருந்த ஒற்றைக் கண்ணன் தான் கறந்த பாலில் பாதியைக் குடித்து விட்டு மீதியைப் பாத்திரத்தில் ஊற்றி னான்.

அதன் பின் அவன் அடுப்பை மூட் டினான். அப்போது அவன் பார்வை யில் குகையில் ஒளிந்திருந்த கிரேக்கர் கள் படவே அவன் ''யார் நீங்கள்?'' என்று தன் கண்ணை உருட்டி இடி இடிக்கும் குரலில் கேட்டான்.

**(தொடரும்)**



## அம்புலிமாமா செய்திகள்

### அதிசயப் பிறவிகளின் சாமர்த்தியம்

**கே**ரளத்தில் எர்ணாகுளத்தில் ஒரே தாய்க்கு ஒரே பிரசவத்தில் ஒரே சமயம் பிறந்த மூன்று குழந்தைகள் மோகன், மனோஜ் என்று இரு ஆண்களும் மாயா என்ற பெண்ணும் ஆவர். இவர்கள் வளர்ந்து பெரியவர்களாகி இந்த ஆண்டு எஸ்.எஸ்.எல்.சி. தேர்வில் முதல் வகுப்பில் தேர்ந்தி



ருக்கிறார்கள். இவர்களது தாய் புள்ளி விவர அதிகாரி. தந்தை அக்கௌண்டஸ் ஆபீசர்.

### விண்வெளியில் அமெரிக்கா சாதனை

**வான** வெளியில் 85 நாட்கள் இருந்து வரும் அமெரிக்க விண்வெளி வீரர் நார் மன்டா கார்ட் ஜுன் 6ல் ஒரு புதிய சாதனையை நிகழ்த்தினார். அதற்கு முன் சென்ற அமெரிக்க விண்வெளி வீரரின் 84 நாட்கள் ஒரு மணி 16 நிமிடங்கள் சாதனையை இது மிஞ்சிவிட்டது. விண் வெளிக்குச் செல்பவர்கள் அங்கு ரஷ்யா நிறுத்தியுள்ள 'மீர்' என்ற விண்வெளி நிலயத்தில் இறங்க வேண்டும். அதன் பின் மற்றொரு விண்வெளி வீரர் பூமிக்கு வெளி யேறிய பிறகே அவர் இருக்க முடியும். யார் விண்வெளிக்குப் போனாலும் அங்கு 439 நாட்கள் இருந்து விட்டு பூமிக்கு சென்ற மார்ச்சில் திரும்பிய ரஷ்ய விண்வெளி வீரர் வாலெரி போலியாகோவின் சாதனையை முறியடிக்க முடியாதுதான்.

### மரங்கொத்தி மூக்கின் கூர்மை

**கூ**ரான நீண்ட அலகைக் கொண்டு மரங் கொத்திப் பறவை மரங்களின் பட்டை களைத் துளைத்து அங்குள்ள பூச்சி புழுக் களைப் பிடித்துத் தின்கிறது. இவை மரங் களை இப்படிக் கொத்துவதாலே இப்பெயர் பெற்றன. சாதாரணமாக இவை வேறு எந்தப் பொருளையும் தொடுவது இல்லை. ஆனால் அண்மையில் இரண்டு மரங்கொத்திகள் அமெரிக்காவின் கென்னடி விண்வெளி ஆராய்ச்சி நிலையத்தில் இருக்கும் ஒரு விண்வெளிக் கப்பலின் எரிபொருள் டாங்க்கின் மேற்பரப்பைக் கொத்த ஆரம்பித் தனவாம். அவை 10 செ.மீ. அளவில் சில ஓட்டைகளைச் செய்து விட்டனவாம். இத னால் அந்த விண்வெளிக் கப்பலைச் செலுத்துவது தள்ளிப் போடப்பட்டது. அதன் பின் சோதித்துப் பார்த்ததில் அப் பறவைகள் லான்ச் பேடில் கூடு கட்டி யுள்ளன என்பது தெரிந்தது.

### காயமுற்ற 'சூபர்மேன்'

**கா**மிக் புத்தகங்களில் வரும் சூபர் மேனின் கதைகளை ஆர்வத்தோடு சிறுவர் கள் படிக்கத்தானே செய்கிறார்கள். சினி மாக்களில் இந்த வெற்றி வீரன் சூபர் மேனின் பாத்திரத்தை ஏற்று நடிக்கும் கிரிஸ்டோபரின் சென்ற மே மாதக் கடைசி வாரத்தில் ஒரு விபத்துக்குள்ளானார். குதிரை சவாரியின் போது கீழே விழுந்ததால் அவரது கழுத்தின் பக்கமுள்ள எலும்பு முறிந்தது. நல்ல வேளை ஆபத்தி லிருந்து தப்பி இப்போது அவர் குணமடைந்து வருகிறார். விரை வில் அவர் சரி யாகி விடுவார் என டாக்டர்கள் கூறுகிறார்கள்.






# கவிஞனும் மன்னனும்

தன் முயற்சியில் சற்றும் மனம் தளராத விக்கிரமன் மீண்டும் மரத்தின் மீதேறி அதில் தொங்கும் உடலைக் கீழே வீழ்த்தினான். பின்னர் கீழே இறங்கி அவன் அதனைச் சுமந்து கொண்டு மயானத்தை நோக்கிச் செல்கையில் அதனுள்ளிருந்த வேதாளம் எள்ளி நகைத்து ''மன்னனே! இந்த பயங்கர இரவில் நீ இப்படி முயல்வது உன் அறியாமையோ என்று சந்தேகத்தை உண்டாக்குகிறது. சில சமயங்களில் பெரியவர்கள் கூட அறிவற்றவர்கள் போல நடந்து கொள்வதும் உண்டு. இதை விளக்க ஒரு கவிஞனின் கதையைக் கூறுகிறேன். கவனமாகக் கேள்'' என்று கூறிக் கதையை ஆரம்பித்தது.

வெகு காலத்திற்கு முன் மாளவ நாட்டின் ஒரு குக்கிராமத்தில் மனோகரன் என்ற கவிஞன் இருந்தான். அவன் முறைப்படி இலக்கணம் கற்கா விட்டாலும் எந்த விஷயம் பற்றியும்

## வேதாளம் சொல்லும் கதை



உடனேயே அழகான கவிதை புனையும் திறன் பெற்றிருந்தான்.

மனோகரன் ஏழைக் குடும்பத்தில் பிறந்தவன். அவனது ஆற்றல் கண்டு அவ்வூரார் அவனைத் தலைநகருக்குப் போய் மன்னர் மகேந்திரபூபதியைக் கண்டு அரச சபையில் இடம் பெறுமாறு கூறினார்கள். ஆனால் அரசசபையில் இடம் பெற அந்நாட்டின் எந்த ஜமீனதாரரிடமாவது ஒரு கலைஞன் சில ஆண்டுகளாகவாவது பணி புரிந்திருக்க வேண்டும் என்று ஒரு விதி இருந்தது.

இந்த விதிக்குப் புறம்பாக மனோகரன் எப்படிச் செயல்பட முடியும்? எனவே தன் ஊரை அடுத்துள்ள விஜயபுர ஜமீன்தாரர் வீரசிம்மரிடம் பணி புரிவது என எண்ணினான். தன் தந்தையிடமும் தன் எண்ணத்தைக் கூறினான். அவனது தந்தையும் ''அரச சபையில் இடம் பெறுவது எளிதல்ல. அதற்கு அதிர்ஷ்டமும் வேண்டும். அங்கு விருப்பு வெறுப்பு என்னும் சக்திகள் சர்வசாதாரணமாக விளையாடுபவை. எனவே நீ எச்சரிக்கையுடன் இருக்க வேண்டும். ஆனால் நீ முதலில் ஜமீன்தாரரிடம் பணி புரிந்தாகவேண்டும். நீ அவரைக் காண ஒரு நல்ல நாள் குறித்துக் கொடுக்கிறேன்'' என்று கூறி நாளையும் குறித்துக் கொடுத்தார். அவனும் அந்த நாளில் தன் தந்தையின் அனுமதி பெற்றுக் கிளம்பிச் சென்றான்.

மனோகரன் வீரசிம்மரின் மாளிகையை அடைந்தபோது அங்கு ஒரே குழப்பமாக இருந்தது. ஒரு மாதத்திற்கு முன்பு விவாகமான அவரது மகள் விதவையாகி விட்டாளாம். அவளும் அவள் கணவன் அன்று காலை பூந்தோட்டத்திற்குச் சென்றபோது அவளது கணவனை ஒரு விஷப் பாம்பு தீண்டிவிட்டதால் அவன் இறந்து விட்டானாம்.

தான் புறப்பட்ட வேளை சரியானதாக இல்லை என்றும் இனி ஜமீன்தாரரை அப்போது காண்பதால் எவ்விதப் பயனும் இராது எனக் கண்டு கொண்ட மனோகரன் உடனேயே அங்கிருந்து தன் ஊருக்கு திரும்பிப் போய் விட்டான்.

அவன் தன் தந்தையிடம் ஜமீன்தார

ரின் வீட்டு நிலையைக் கூறி ''எனக்கு அதிர்ஷ்டம் இல்லை. நீங்கள் குறித்துக் கொடுத்தநல்லவேளையில் கிளம்பிப் போயும் வேலை நடக்கவில்லை! என்ன செய்வேன்?'' என்று மனம் வருந்தினான்.

அவனது தந்தையும் ''நானாகப் பார்த்து நல்ல வேளையில் உன்னை அனுப்பி வைத்தது உனக்குச் சரிப்பட்டு வரவில்லை. ஒரு வாரம் கழித்து நீ சகடபுர ஜமீன்தாரர் சட்டநாதரைப் போய்ப் பார். இம்முறை நீ புறப்படுவதற்கான நல்ல நேரத்தை என் நண்பனைக் குறித்துக் கொடுக்கச் சொல்கிறேன்'' என்றார்.



தன் தந்தையின் நண்பர் குறித்துக் கொடுத்த நல்ல நேரத்தில் கிளம்பி மனோகரன் சகடபுரத்தை அடைந்தான். ஆனால் அதற்கு முந்தைய தினத்திலிருந்து சட்டநாதர் ஏதோ ஒரு நோயால் அவஸ்தைப்படுவதாயும் வைத்தியர்களால் அது என்ன நோய் என்று கண்டுபிடித்து அதற்கு ஏற்ற மருந்து கொடுக்க முடியவில்லை என்பதும் மனோகரனுக்குத் தெரிந்தது.

அம்முறையும் தன் முயற்சி பலிக்காமல் போனது கண்டு மனோகரன் மனமுடைந்து போனான். அவன் மிகவும் வருத்தத்தோடு தன் ஊருக்குத் திரும்பிச் செல்லலானான். அப்போது வழியில் கண்ட ஒரு குளத்தில் இறங்கி நீர் குடித்து தாகம் தீர்த்துக் கொண்ட பின் அதன் கரையில் அவன் ஒரு மரத்தடியே படுத்துச் சற்று இளைப்பாறினான்.

அவன் மனதில் ''இம்முறையும் எனக்கு அதிர்ஷ்டம் இல்லை. இரு முறைகளிலும் நான் நல்ல நேரம் பார்த்துத் தான் கிளம்பினேன். ஆனால் என்ன பயன்? இரு முறைகளிலும் தடங்கல் ஏற்பட்டு ஜமீன்தாரர்களைப் பார்க்க முடியாமலே போய் விட்டதே. இனி என்ன செய்வது?'' என்று எண்ணிக் கவலைப்படலானான்.

சற்று நேரத்திற்குப் பின் அவ் வழியே வந்த ஒரு பயணி குளத்தைக் கண்டதும் அதில் இறங்கி நீர் குடித்துத் தன் தாகத்தைத் தணித்துக் கொண்டான். அவன் குளக்கரைக்கு வந்து ஒரு மரத்தடியே படுத்திருக்கும் மனோ



கரனைக் கண்டான். அவனது முகம் வாட்டமுற்றிருப்பதைக் கண்ட அப் பயணி அவனருகே சென்று ''ஐயா! தாங்கள் யாரோ? ஏன் கவலையுடன் இருக்கிறீர்கள்?'' என்று பரிவுடன் கேட்டான்.

மனோகரனும் எழுந்து ''நான் ஒன்றும் பெரிய பிரமுகனல்ல. துரதிர்ஷ்டம் பிடித்த ஒரு கவிஞன்'' என்று விரக்தியுடன் கூறினான். பயணியும் ''கவிஞரா? துரதிர்ஷ்டம் பிடித்தவரா? எங்கே உங்கள் கையைக் காட்டுங்கள். ரேகை பார்த்துச் சொல்கிறேன்'' என்றான். மனோகரனும் தன் வலது கையை நீட்டவே பயணியும் அதைப் பார்த்துவிட்டு ''இன்னும் மூன்று மாதங்களுக்கு நீங்கள் உங்கள் வீட்டைவிட்டு நகர வேண்டாம். அதன்பின் வரும் மாசி மகத்தன்று உங்கள் ஊரின் கிழக்கு திசையில் சென்று முதலில் வரும் ஜமீனை அடைந்து அந்த ஜமீன்தாரரிடம் பணிபுரியுங்கள். அதன் பிறகு உங்களுக்கு எல்லாம் நல்லபடியாகவே நடக்கும்'' என்று கூறிவிட்டுச் சென்றான்.

மனோகரன் எழுந்து அந்த சோதிடன் கூறியதை எண்ணிவாறே தன் ஊர் போய் சேர்ந்தான். அவ்வூரின் கிழக்கே உள்ள முதல் ஜமீன்தாரர் சிங்கராயர். அவர் வக்கிரபுத்தி கொண்டவர். அவரைப் பற்றி பல வேடிக்கைக் கதைகள் மக்களிடையே பரவி இருந்தன. கவிஞர்களின் கவிதைகளைக் கேட்டு வெற்றிலை பாக்கில் ஒரு பைசா வைத்து பல கவிஞர்களுக்குக் கொடுத்து அனுப்பியவராம். இப்படிப்பட்டவரிடமா போய்ப் பணிபுரிவது என்று மனோகரன் யோசனையில் ஆழ்ந்தான்.

மூன்று மாதங்களான பின் அவன் மாசி மகத்தன்று சிங்கராயரைக் காண அவரது மாளிகைக்குச் சென்றான். அப்போது அவரது திவான் ''இன்று ஜமீன்தாரரின் தந்தையின் திவச நாள். எனவே மாலை வரை அவரைப் பார்க்க முடியாது'' என்றார். அவன் திவானிடம் ''சரி. மாலையாகும் வரை இங்கேயே காத்திருக்கிறேன் அதற்குப் பிறகு அவரைக் காண்கிறேன். அதற்கான ஏற்பாட்டைச் செய்து கொடுங்கள். நான் ஒரு கவி

ஞன்'' என்று வேண்டினான்.

திவானும் மனோகரனை ஒரு முறை பார்த்து விட்டு ''ஏனோ உனக்கு உதவ என் மனம் விரும்பு கிறது. நீ இன்று மாலை ஜமீன்தார ரைக் காண ஏற்பாடு செய்கிறேன்'' என்றார். அவன் தங்கி உணவு உண்ண வும் அவர் ஏற்பாடு செய்தார்.

அப்போதும் மனோகரன் தனக்கு அதிர்ஷ்டம் கை கொடுக்கவில் லையே என்று எண்ணலானான். அம் முறையிலும் வந்தும் ஜமீன்தாரரைக் காண முடியவில்லை. ஆனால் திவான் கூறிய உறுதியும் முன்பு குளக்கரையில் சோதிடம் சொன்ன பயணியின் வார்த்தைகளும் அவன் மனதில் நம்பிக்கையை ஏற்படுத்தின. பொறுத்திருந்தான் அவன்.

மாலையாகியது. மனோகரனுக்கு ஜமீன்தாரரைக் காண அதுவரை அனு மதி கிடைக்கவில்லை. இருட்டியும் விட்டது. அப்போது திவான் வந்து ''ஐயா! உங்களை பற்றி ஜமீன்தாரரி டம் கூறினேன். அவரது தந்தைக்குக் கவிதை மிகவும் பிடிக்குமாம். அவரது திவச நாளில் தாங்கள் வந்ததால் தங் களை ஜமீன்தாரர் ஆஸ்தான கவிஞ ராக நியமிக்கச் சொல்லி இருக்கிறார். உங்களுக்கு ஆயிரம் வராகன்களும், பட்டாடைகளும், ஒரு குதிரை வண்டி யும் கொடுக்கச் சொல்லி இருக்கிறார். தினமும் மாலையில் வந்து நீங்கள் உங்கள் கவிதைகளை அவருக்குக் கூற வேண்டும். இவற்றைச் செய்யத் தாம தமாகியது. இதோ ஆயிரம் வராகன் களும் பட்டாடைகளும், குதிரை வண் டியும் வெளியே தயாராக உள்ளது'' என்றார்.

அது கேட்டு மனோகரன் மலைத் துப் போனான். அவன் அவற்றை ஏற்று திவானுக்கும் ஜமீன்தாரருக்கும் நன்றி கூறி வண்டியில் ஏறித்தன் ஊரை அடைந்தான். ஆம். அவனை அதிர்ஷ் டம் கை விட்டு விடவில்லை. முடி வில் அவன் முயற்சி பலித்தேவிட் டது. ஜமீன்தாரரிடம் வேலை செய்ய வாய்ப்பும் கிடைத்துவிட்டது. அதன் பின் ஓராண்டு காலம் மனோகரன் அந்த ஜமீன்தாரரிடம் ஆஸ்தான கவி ஞனாகப் பணி புரிந்தான். பெயர்தான் கவி. கவிஞர்களிடையே கவிதை கூற



புன்னகை புரிந்தவாறு கேட்கவே, முன்பு கைரேகை பார்த்துச் சொன்ன பயணியின் நினைவும் மனோகரனுக்கு வந்தது. அவன் உடனே ''நான் அதிர்ஷ்டசாலி. துரதிர்ஷ்டசாலி அல்ல'' என்றான்.

பயணியும் ''வேடிக்கையான பதிலாக இருக்கிறதே'' எனவே மனோகரனும் ''மன்னிக்க வேண்டும். ஏதோ நினைவில் என்னவோ கூறிவிட்டேன். உங்கள் கேள்விக்கு விடையாக ஒரு கவிதை கூறுகிறேன்'' என்று கூறி பொருள் புதைந்த கவிதை ஒன்றை உடனே புனைந்து கூறினான்.

அதன் கருத்து இதுதான். பௌர்ணமி நிலவில் ஒரு பூந்தோட்டத்து மலர்கள் நறுமணத்தைப் பரப்புகின்றன. அந்த நறுமணத்தில் கவரப்பட்ட வண்டுகள் மலர்களின் தேனை திருப்தியாகப் பருகுகின்றன. அப்போது பேரழகி ஒருத்தி வாடிய முகத்துடன் அம்மலர்களிடையே அமர்ந்திருக்கிறாள். இதை கவனித்த மலர்கள் ''என்னம்மா! ஒருநாள் காலையில் மலர்ந்து அன்று மாலையிலே வாடிவிடும் நாங்களே மகிழ்ச்சியாக இருக்கையில் வாடாத செந்தாமரை போன்ற உன் முகம் ஏன் வாட்டமுற்றுள்ளது?'' என்று கேட்டன. அவளோ ''நானும் மலர்தான். ஆனால் என்னைச் சுற்றியுள்ளவை வண்டுகளல்ல காற்றில் நான் அசைந்தாடும்போது குத்தும் முட்கள்'' என்றாள்.

வாய்ப்பில்லை. ஆனால் ஜமீன்தாரரிடமிருந்து பணம் மட்டும் ஒழுங்காகக் கிடைத்து வந்தது.

ஒருநாள் வண்டியை ஓட்டுபவன் என்ன காரணத்தாலோ வராததால் மனோகரன் நடந்தே சென்றான். வழியில் ஒரு குளத்தைக் கண்டு அதன் நீரைப் பருகி தாகம் தணித்துக் கொண்டு அங்கே சற்று இளைப்பாறினான். அப்போது அங்கு ஒரு பயணி மரத்தடியே அமர்ந்திருப்பதைக் கண்டான். அருகிலேயே ஒரு உயர்ரகக் குதிரை மரத்தில் கட்டப்பட்டிருந்தது.

அவன் மனோகரனைப் பார்த்துப் புன்னகை புரியவே அவனும் அப்பயணியருகே சென்றான். அப்பயணியும் ''ஐயா! நீங்கள் யாரோ?'' எனப்



கவிதையைக் கூறியபின் மனோகரன் ''அந்தப் பேரழகி என் கவிதை. அவளுக்கு என் மனதில் இருக்க இடம் கொடுத்த துரதிஷ்டசாலி நான். என் குடும்பத்தை நன்கு கவனிக்கும் அதிர்ஷ்டசாலி நான்'' என்று கூறி தனக்கு நேரமாவதாகச் சொல்லி அவரை வணங்கி விட்டுச் சென்றான்.

இதற்குப் பின் ஒரு வாரம் கழிந்தது. ஒருநாள் காலை அரசுக்குடைய இரட்டைக் குதிரைகள் பூட்டிய குதிரை வண்டி ஒன்று மனோகரனின் வீட்டு வாசலில் வந்து நின்றது. அதிலிருந்து இறங்கிய இரு வீரர்கள் மனோகரனைக் கண்டு வணங்கி ''தங்களை அரசாங்க மரியாதைகளுடன் அழைத்து வரும்படி மகாராஜா கட்டளை இட்டிருக்கிறார்'' என்றார்கள்.

அப்போது மனோகரனுக்குத்தான் ஒரு வாரத்திற்கு முன் சந்தித்த பயணியின் நினைவு வந்தது. அவர்தான் மகாராஜா என அவன் தெரிந்து கொண்டான். அவன் அரண்மனையை அடைந்ததும் மகாராஜாவே அவனை வரவேற்று ''இளம் கவிஞரே! இனி தினமும் உங்கள் கவிதைகளால் என்னை மகிழ்விக்க வேண்டும்'' என்றார்.

மனோகரனும் ''ஆகா! மகிழ்ச்சியுடன் செய்கிறேன். ஆனால் இப்போது சிங்கராயரின் ஆஸ்தான கவிஞன் நான். அவரிடம் ஊதியம் பெற்று வருகிறேன். அவரிடம் சொல்லி விட்டு அவரது அனுமதி பெற்றுக் கொண்டு உங்கள் பணியை மேற்கொள்கிறேன்'' என்றான். மகாராஜாவும் ''ஆகா! எவ்வளவு உயரிய பண்பாடு! கவிதையோடு பண்பும் சேர்ந்து உங்களை மிகவும் உயர்த்தி விட்டது. உங்களது விருப்பப்படியே செய்யுங்கள்'' என்று கூறி அனுப்பினார்.

வேதாளம் இக்கதையைக் கூறி ''மனோகரனுக்கு நிம்மதியையும் கொடுத்து நல்வாழ்வை அளித்தவர் மகாராஜா. ஆனால் மனோகரனின் வாழ்வு சிங்கராயரிடம் பணிபுரிந்து வந்த போது முட்கள் சூழ்ந்த ரோஜா மலர் போல அவனது வாழ்க்கை இருந்தது. அவனுக்கு நல்வாழ்வு அளித்தவர் மகாராஜா. அவர் சொல்

லுக்குக் கட்டுப்பட்டு இருப்பதை விட்டு சிங்கராயரின் அனுமதி பெற்று வருவதாகக் கூறியது அவனது அறி வீனத்தைத்தானேகாட்டுகிறது? இதை மகாராஜா அவனது உயரிய பண்பு எனக் கூறிப் பாராட்டினாரே. இது சரியா? மனோகரனின் நடத்தையும் மகாராஜாவின் போக்கும் சரியா அல்லது தவறா? இச்சந்தேகங்களுக் குச் சரியான விடைகள் தெரிந்திருந் தும் நீ கூறாவிட்டால் உன் தலை வெடித்துச் சுக்கு நூறாகி விடும்'' என்றது.

விக்கிரமனும் ''மனிதன் தன் வாழ்க்கையில் கலையை விட உண வையே முதலில் விரும்புகிறான். எனவே மனோகரனின் குடும்பம் வயிறார உண்டு வாழ உதவியவர் சிங்கராயர். ஆனால் மனோகரனின் கவிதை அவரது ஆதரவில் பிரபலமாக வில்லை என்றால் அதற்குக் காரணம் சிங்கராயரின் போக்கே. அதுபற்றிப் பேசுவது அவரைக் குறை கூறுவது போலாகும். அவ்வாறு செய்யும் இயல்பு மனோகரனிடம் கிடையாது. எனவேதான் அவன் தன் நிலையை ஒரு கவிதை வாயிலாக பயணியாக வந்த மகாராஜாவிடம் கூறினான். அதிலும் சிங்கராயரின் பெயரோ, அவனது பெயரோ இருக்கவில்லை. இதைக் கண்ட மகாராஜா அவனிடம் உயரிய பண்பு இருப்பதாகக் கூறி னார். மகாராஜா கொடுக்க முன் வந்த பதவியை ஏற்றும் அதற்கு முன் தான் செய்ய வேண்டிய கடமையைக் கூறி யும் மனோகரன் தன் உயர் நெறியைக் காட்டினான். மகாராஜாவும் அவ் வாறே செய்யச் சொன்னதும் அவரது பரந்த மனப்பான்மையையும் உயரிய பண்பையும் காட்டுகிறது. எனவே இருவரது செயல்களும் நல்நறிவோடு செய்யப்பட்ட செயல்களே'' என் றான்.

விக்கிரமனின் சரியான இந்த பதி லால் அவனது மௌனம் கலையவே அவன் சுமந்து வந்த உடலோடு வேதா ளம் கிளம்பிப் போய் மீண்டும் முருங்க மரத்தில் ஏறிக் கொண்டது.



# மத்திய இந்தியக் கோட்டைகள்

கருத்து: **மீரா உக்ரா** ◆ படங்கள்: **அரித்ரா**



தோர்ணா
கோட்டை

**தெ**ன்மேற்கு இந்தியாவிலுள்ள கோட்டைகள் மராட்டிய மாவீரர் சிவாஜியின் வாழ்க்கையோடும் காலத்தோடும் தொடர்பு கொண்டவை. சிவாஜி பழைய சாதவாகனக் கோட்டையான சிவனேரில் 1630 பிப்ரவரி 19ல் பிறந்தார். அவர் முதலில் வென்ற கோட்டை தோர்னா. மழை காலத்தில் பீஜப்பூர் படைகள் அதனைக் காலி செய்து விட்டுத் தலைநகருக்குப் போனபின் ஒரு துளி ரத்தம் சிந்தாமல் சிவாஜி அதனைத் தன்வசப்படுத்திக் கொண்டார். அவர் அக்கோட்டையில் ஒரு பெரிய புதையலைக் கண்டெடுத்தாராம். அதைக் கொண்டு ராஜ்கட் என்ற புதிய கோட்டையைக் கட்டினாராம். அது தோர்னாவிலிருந்து ஒன்பது கிலோ மீட்டர் தூரத்தில் உள்ளது.

சிவாஜி ராஜ்கட் கோட்டையில் இருபது ஆண்டுகள் இருந்து ஆட்சி புரிந்தார். அவர் 1647ல் கோண்டானாக் கோட்டையை வென்றாராயினும் முகலாயர்களுக்குப் புரந்தர் உடன்படிக்கைப்படிக் கொடுக்க வேண்டியதாயிற்று.



ராஜ்கட் கோட்டையின் அரண்

கோண்டனா கோட்டையைக் கைப்பற்ற அவர் 1670 பிப்ரவரியில் 600 மாவலி வீரர்களை தானாஜீ மாலுஸரேயின் தலைமையில் அனுப்பினார். தானாஜீயுடன் அவரது சகோதரர் சூர்யாஜீயும் சென்றார். தானாஜீ அக்கோட்டையைக் கைப்பற்ற ஒரு உடும்பை முதலில் செங்குத்தான மதில் சுவரில் ஒரு கயிறைக் கட்டி ஏற்றி ஓரிடத்தில் அதை இறுகப் பற்றச் செய்தாராம். பிறகு அக்கயிறைப் பற்றிக் கொண்டு ஒரு வீரன் ஏறிப் போய் கயிறை நன்கு கட்டினான். அந்த உடும்பின் பெயர் யஷ்வந்தி. அக்கயிறைப் பற்றி முந்நூறு வீரர்கள் ஏறிக் கோட்டைக்குள் தானாஜீயின் தலைமையில் சென்றார்களாம்.

கோட்டை கைப்பற்றப்பட்டது. அப்போரில் ஆயிரம் பேர்களுக்கு மேல் இறந்தார்கள். இறந்தவர்களில் தானாஜீயும் ஒருவர். இச் செய்தி சிவாஜிக்குத் தெரிவிக்கப்பட்டதும் அவர் ''கோட்டை கிடைத்தது. ஆனால் என் சிங்கத்தை இழந்து விட்டேன்'' என்று


தானாஜீ மாலுஸரே

கூறினார். கோண்டானாக் கோட்டைக்கு அப்போது முதல் சிம்மகட் என்ற பெயர் ஏற்பட்டது. அவரது நாடு பெரியதாகவே சிவாஜிக்கு ஒரு பெரிய தலைநகராகத் தேவைப்பட்டது. அவர் 12ம் நூற்றாண்டு ரெய்லிக் கோட்டையை இதற்காகத் தேர்ந்தெடுத்தார். இது ஒரு குன்றின் சமதளத்தில் 2.4 கி.மீ நீளத்திலும் 1.6 கி.மீ அகலத்திலும் அமைந்தது. இதற்கு ராய்கட் என்ற பெயரிடப்பட்டது. இங்குதான் 1674 ஜூன் 6ல் சிவாஜியின் மகுடாபிஷேகம் நடைபெற்றது.

சிவாஜியின் மகுடாபிஷேகம்

அந்த கோட்டையின் வலிமையைக் காண சிவாஜி ''இந்தக் கோட்டை மதில் மீது யார் கண்ணிலும் படாமல் ஏறிக் கோட்டைக்குள் வருபவருக்குப் பெருந்தொகை சன்மானமாக அளிக்கப்படும்'' என அறிவித்தார். மாஹட் என்ற கிராமத்தைச் சேர்ந்த ஒரு இளைஞன் அவ்வேலையைச் செய்தான்.

அவன் வந்த வழி அடைக்கப்பட்டு தற்போது அது 'சோர்தர்வாஜா' (திருட்டு வாசல்) என்று அழைக்கப்படுகிறது. ஒருமுறை இரவு வெகுநேரமாகிய பின் ஹீராகனி என்ற பால்க்காரி அக்கோட்டையிலிருந்து வெளியே செல்ல முடியவில்லை. கோட்டைக் கதவுகள் எல்லாம் மூடப்பட்டு விட்டன. காவலாளிகள் அவளை வெளியே போக விடவில்லை. அவளோ தனியாக விட்டு வந்த தன் குழந்தையிடம் போகத் துடித்தாள். அவள் ஓரிடத்தில் மதில் மீது ஏறி ஒரு மரக்கிளை வழியாகக் கோட்டைக்கு வெளியே ஆழ்பள்ளத்தில் அந்த இருட்டில் குதித்துச் சென்றாள். ஹீராகனி ஏறிய மதில் சுவர் பகுதியின் மீது ஒரு காவல் கோபுரத்தை சிவாஜி ஏற்படுத்தி அதற்கு 'ஹீராகனி புர்ஜ்' என்றும் பெயரிட்டார்.



ஹீராகனி தப்பிச் செல்தல்

சிவாஜியின் சமாதி இந்த ராய்கட் கோட்டையில்தான் கட்டப்பட்டுள்ளது. அதற்கு எதிரே அவரது சிதையில் குதித்து உயிர் நீத்த அவரது நாய் வந்தியாவின் சமாதியும் உள்ளது.



ராய்கட் கோட்டை



சிவாஜியின் சமாதி



ஜன்ஜீராக் கோட்டை

சிவாஜி பலமுறை முயன்றும் தம் வாழ்நாளில் கைப்பற்ற முடியாத கோட்டை தீவில் அமைந்த ஜன்ஜீராக் கோட்டை. இதை 1511ல் மாலிக் அம்பர் கட்டினான். இந்தக் கோட்டையை போர்த்துக்கீசியராலும் பிரிட்டிஷாராலும் கூடக் கைப்பற்ற முடியவில்லை.

ஜன்ஜீராக் கோட்டையைக் கண்ட சிவாஜி பலதுறைமுகக் கோட்டைகளைக் கட்டினார். சிந்துதுர்க் என்ற கோட்டையை மால்வன் கடற்கரையில் கட்ட அவருக்கு மூன்று ஆண்டுகளும் ஒரு கோடி ஹோன்ஸும் பிடித்ததாம். இதைக் கட்ட சிவாஜி நூறு போர்த்துக்கீசியத் தொழிலாளிகளையும் அமர்த்திக் கொண்டாராம். அவர் பத்மகட் என்ற கோட்டையைக் கட்டி அதில் கப்பல்கள் தயாரிக்க ஏற்பாடுகளையும் செய்திருந்தார்.

ஜன்ஜீராக் கோட்டைக்கு 56 கி.மீ. தூரத்திலுள்ள ஒரு தீவுக் கோட்டையை அவர் கைப்பற்றி அதனைப் புதுப்பித்தார். அதற்கு அவர் சுவர்ணதுர்க் என்று பெயரிட்டார். இங்கிருந்துதான் அவர் சித்திகளின் நடவடிக்கைகளைக் கண்காணித்து வந்தார்.

சிவாஜி 1680ல் இறக்கும் போது அவர் வசம் 24 கோட்டைகள் இருந்தன.

சுவர்ணதுர்க் கோட்டை






# காரணம் இதுவே!

மதுரகிரி இளவரசன் மங்களசேனன் குருகுலத்தில் தன் படிப்பை முடித்து விட்டுத் தலைநகருக்கு வந்தான். அவனுக்குத் தன் தந்தையோடு இருந்து அரசியல், ஆட்சி முறை இவை எல்லாம் அறிந்து கொள்வதை விட வேட்டையாடுவதிலும் மலைகளிலும் நதிக்கரைகளிலும் சுற்றுவதே மிகவும் பிடித்தமான செயலாக இருந்தது. எதிலும் அவசரப்பட்டுச் செயல்படுவதும் அவனது இயல்பு.

தன் மகனின் போக்கை எப்படி ஆட்சியில் கவனம் செலுத்தத் திருப்புவது என்றே மன்னன் சிம்மசேனன் கவலைப்படலானான். அவன் கவனத்தை ஆட்சியில் திருப்ப எவ்வளவோ முயற்சிகள் செய்தான். தானும் அவனுக்கு அறிவுரைகள் கூறி அறிஞர்களைக் கொண்டும் புத்திமதிகள் கூற வைத்தான். ஆனாலும் மங்களசேனன் திருந்தவில்லை. இதே கவலையில் அவன் நோயுற்று திடீரென இறந்தும் விட்டான். இதனால் இளம் வயதினனான மங்களசேனன் மதுரகிரியின் மன்னனானான்.

மன்னனாகியும் கூட மங்களசேனன் போக்கில் எவ்வித மாறுதலும் ஏற்படவில்லை. முன்போல அவன் தனியாகவே வேட்டையாடப் போய் வந்தான். நல்ல அமைச்சரான சோமதேவரும் நாட்டுப்பற்று மிக்க சேனாதிபதி உக்கிரசேனனும் இருந்ததால் நாட்டு மக்களுக்கு எவ்விதக் குறையும் தோன்றவில்லை.

ஒருநாள் மங்களசேனன் வேட்டையாட அரண்மனையிலிருந்து அதிகாலையிலே கிளம்பிவிட்டான். காட்டில் வெகுதூரம் போய் வேட்டையாடி உச்சி வேளைக்குக் களைத்து போனான். தாகம் எடுத்ததால் தண்ணீர் எங்காவது உள்ளதா என்று பார்க்கலானான். கொஞ்ச தூரத்தில்

—சிவனார் செல்வன்—



ஒரு குளம் தென்படவே அவன் அதனை நோக்கிச் சென்றான்.

மங்களசேனன் குதிரையிலிருந்து இறங்கி குளத்து நீரைக் குடித்து தாகம் தணித்துக் கொண்டு தன் குதிரைக்கும் நீர் காட்டினான். பிறகு அதன் கடிவாளத்தைப் பிடித்து நடத்தியவாறே சற்று தூரத்திலிருந்த குடிலை அடைந்தான். அதைச் சுற்றிப் பழமரங்களும் மலர்ச் செடிகளும் இருந்தன.

ஜன நடமாட்டமே இல்லாத போது அந்த இடத்தில் பழ மரங்களும் பூத்துக் குலுங்கும் மலர்ச் செடிகளும் எப்படி உள்ளன என யோசிக்கலானான். குடிலைச் சுற்றி அவை இருந்ததால் அங்கு யாராவது இருந்தே நீர் பாய்ச்சி அவற்றை வளர்த்துப் பாதுகாத்துக் கொண்டிருக்க வேண்டும் என அவன் எண்ணினான்.

அவன் குடிலுக்குள் சென்றபோது ஒரு அழகிய பெண் கூண்டிலிருந்த கிளிக்கு நாவல் பழம் கொடுத்துக் கொண்டிருந்தாள். அப்போது கூண்டுக்கிளி ''மன்னருக்கு நல்வரவு'' எனக் கூறி வரவேற்றது. கிளி சொன்னது கேட்டு அப்பெண் திரும்பிப் பார்த்தாள். மங்களசேனனைக் கண்டு அவள் சிலையாக நின்று போனாள். மங்களசேனனும் அவளைக் கண்டு மலைத்து நின்றான்.

அடுத்த வினாடியே அந்தப் பெண் ''உச்சி வெயிலில் வந்திருக்கிறீர்கள். குடிக்க நீர்மோர் கொண்டு வந்து தரட்டுமா?'' என்று கேட்டாள். அவனோ ''வேண்டாம். சற்று முன்தான் குளத்து நீரைக குடித்து தாகத்தைத் தணித்துக் கொண்டேன். ஆமாம். நீ யார்? இந்தக் காட்டில் தனியாகவா இருக்கிறாய்? நான் எவ்வளவோ அரசகுமாரிகளைப் பார்த்திருக்கிறேன். அவர்கள் எல்லோரையும்விட நீ அழகாக இருக்கிறாய்'' என்றான்.

அது கேட்டு அவள் புன்னகை புரிந்து ''நான் இங்கே தனியாக இல்லை. இளம் வயதில் என் பெற்றோரை இழந்தேன். என்னை என் தந்தை தம் நண்பரான ஒரு வேடரிடம் ஒப்படைத்தார். இந்தக் குடிலில் நாங்கள் இருவரும் இருக்கிறோம். எனக்கு வைத்தியம் தெரியும் இங்குள்ள மலைவாசிகள் நோய்

வாய்ப்பட்டால் சிகிச்சை அளித்து வருகிறேன். என் பெயர் கமலினி'' என்றாள்.

மங்களசேனனும் ''என் பெயர் மங்களசேனன். இந்நாட்டு மன்னன்'' என்ற சற்று கர்வத்தோடு கூறினான். அதைக் கேட்டு அவள் ஆச்சரியப்பட்டாள் ''ஆம். உங்களைப் பார்த்ததுமே ஒரு மன்னர் என்று தெரிந்து கொண்டேன். உங்கள் பெயரைக் கேட்டிருக்கிறேன். ஆனால் இப்போதுதான் நேரில் பார்க்கிறேன்'' என்றாள்.

மங்களசேனன் இன்னும் ஏதோ சொல்ல முயல்கையில் அவள் ''மன்னியுங்கள். மலைச்சாதித் தலைவர் நோயுற்றிருக்கிறார். அவர் இங்குதானிருக்கிறார். அவருக்கு மருந்து கொடுக்க வேண்டிய வேளை வந்துவிட்டது. நான் அவரை கவனிக்கப் போகிறேன்'' என்றாள்.

அதைக் கேட்ட மங்களசேனன் கோபமும் ஆத்திரமும் அடைந்தான். அரசனான தன்னை அவமதித்து விட்டு ஒரு மலைச்சாதியினனை முக்கியமாக அவள் கருதியதை அவனால் பொறுத்துக் கொள்ள முடியவில்லை.

மங்களசேனன் அவள் முன் நின்று ''கமலினி! அழகியாயான நீ இந்தக் காட்டில் மலைச்சாதியினிரிடையே வசிப்பது சரியல்ல என்னோடுவா. உன்னை ராணியாக்கி அரண்மனையில் வாழச் செய்கிறேன்'' என்றான். அது கேட்டு கமலினி அவனை ஒரு முறை ஏற இறங்கப் பார்த்து விட்டுக்



யைப் பிடித்த பிடியை விட்டு விட்டான். கமலினி அம்பு எய்தவர் யாரெனப் பார்த்தபோது தனது பாதுகாப்பாளனான வேடனைக் கண்டாள். அவனது முகமும் கண்களும் கோவைப் பழம் போலச் சிவந்திருந்தன.

கமலினி காயுமுற்ற மங்கள சேனனை நடத்திக் கொண்டு போய் குடிலுக்குள் ஒரு கட்டிலின் மீது படுக்க வைத்தாள். அவள் அவன் கையில் தைத்த அம்பை எடுத்து காயத்திற்கு மருந்து வைத்துக் கட்டினாள். இதற்குள் அந்த வேடன் குடிலுக்குள் வந்து ''எங்கே அந்தப்பயல்? அரசனா அவன்?'' என்று கத்திக் கேட்டான்.



குடிலுக்குள்போக அடி எடுத்து வைக்கவே மங்களசேனன் குறுக்கே நின்று ''மன்னனான நான் கூறுவதைப் புறக்கணிக்க உனக்கு எவ்வளவு தைரியம்?'' எனக் கூறி அவளது கையைப் பிடித்து இழுத்துக் கொண்டு தன் குதிரையை நோக்கிச் சென்றான்.

கமலினி அவன் பிடியிலிருந்து தப்ப முயன்று ''சீச்சி. என்னைத் தொடாதே'' என்று உரக்கக் கத்தினாள். ஆனாலும் அவன் அவளை வலுக்கட்டாயமாக இழுத்துச் சென்றான். அப்போது ஒரு அம்பு 'விர்' ரெனப் பாய்ந்து வந்து அவன் கையில் தைத்தது.

மறு நிமிடம் மங்களசேனன் ஐயோ என்று கத்தியவாறே கமலினி

மங்களசேனன் மெல்லிய குரலில் ''என்னை மன்னித்து விடு. நான் செய்தது பெருந்தவறே. இன்று ஏனோ என் புத்தி கெட்டுவிட்டது'' என்று கூறினான். அதுகேட்டு அந்த வேடுவன் சற்றுக் கோபம் தணிந்தவனாய் கமலினியைப் பார்த்தான். அவனை வெளியே போகும்படி அவள் சைகை செய்தாள்.

சற்று நேரத்திற்குப்பின் மங்கள சேனன் மெதுவாக எழுந்து சென்று தன் குதிரை மீது அமர்ந்து தலைநகருக்குச் சென்றான். இதற்கு ஒரு வாரத்திற்குப் பின் அமைச்சர் சோமதேவர் அரச பரிவாரத்துடன் பல பரிசுகளோடு கமலினியின் குடிலுக்கு வந்து ''அம்மா! இதெல்லாம் எம்மன்னர்

உனக்கு அனுப்பியுள்ள பரிசுகள். அவர் சிறு வயதிலிருந்தே எதிலும் அவசரப்பட்டுச்செயல்படுபவர். ஒரு வாரத்திற்கு முன் இங்கு நடந்த சம்ப வத்தால் அவர் முற்றிலும் மாறிப் போய்விட்டார். தான் செய்த தவறுக் காக இனி ஒருப்போதும் தான் திரு மணம் பற்றிப் பேசவே போவ தில்லை என்று சபதம் செய்து விட் டார்'' என்றார்.

அது கேட்டு கமலினி தன் கண் களில் தேங்கிய கண்ணீரைத் துடைத் துக் கொண்டாள். அங்கே நின்றிருந்த வேடனிடம் ''நீ மன்னரிடம் ஆவணி மாதத்தில் இங்கு வந்து என்னை மணந்து கொண்டு போகும்படிச் சொல்'' என்று கூறிவிட்டு அவள் உள்ளே போய் விட்டாள். வேடனும் கமலினியின் விருப்பப்படியே எல்லா ஏற்பாடுகளையும் செய்தான். அதற்குப் பின் குறித்த நாளில் கமலினிக்கும் மங்களசேனனுக்கும் விவாகம் நடை பெற்றது.

அரண்மனையில் விவாகமான மறுநாள் கமலினியும் மங்களசேன னும் உப்பரிகையில் அமர்ந்து பேசிக் கொண்டிருந்தார்கள். கமலினி திடீ ரென ''உங்கள் சபதம் முறியும்படிச் செய்து விட்டேனே'' என்று சிரித்துக் கொண்டே கூறினாள். மங்களசேன னும் ''ஆம். சபதம் முறிந்தது உண் மையே. ஆனால் முதலில் நீ என்னைப் புறக்கணித்தாயே இப்போதோ என்னை மணந்து கொண்டிருக் கிறாயே. இதற்கு என்ன சொல் கிறாய்?'' என்று கேட்டான்.

கமலினியும் ''முன்பு நான் புறக் கணித்தது அவசரமாகச் செயல்படுப வரை. ஆனால் அமைச்சர் என் குடி லுக்கு வந்து உங்களைப் பற்றி சொன் னது கேட்டு நீங்கள் என்னை மனப் பூர்வமாக விரும்புவதைத் தெரிந்து கொண்டேன். நீங்கள் முற்றிலும் மாறிவிட்டதும் தெரிந்தது. அதனால் தான் உங்களை மணக்கச் சம்மதித் தேன்''என்றாள்.

அது கேட்டு மங்களசேனன் மகிழ்ந்து போனான்.





# உணவே போதுமா?

சாளுவ நாட்டு மன்னன் சாரங்க தரன் நல்ல கலாரசிகன். அவன் கலைஞர்களை ஆதரித்ததோடு பல துறைக் கலைஞர்களைத் தன் ஆஸ்தானத்தில் இருக்கவும் செய்தான்.

ஒரு முறை சாரங்கதரன் தன் பட்டத்து ராணியான ரஞ்சனாவுடன் அரண்மனைப் பூங்காவில் உலாவிக் கொண்டிருந்தான். அப்போது ஆஸ்தான கவிஞர் அஷ்டபதி அங்கு வந்தார். இன்னும் சில நாட்களுக்குப் பின் நடக்கப் போகும் சகலகலா உற்சவத்தை மன்னன் சிறப்பாக நடத்த எண்ணி இருந்தான். அச்சமயம் கலைஞர்களுக்கு ஏராளமாகப் பரிசளித்து கௌரவிக்கவும் எண்ணி இருந்தான். அது பற்றிப் பேசத்தான் அஷ்டபதி அங்கு வந்தார்.

அவர்கள் பேசுவதைக் கேட்டுக் கொண்டிருந்த ரஞ்சனா ''இந்த உற்சவத்தால் பணத்தை வீணாக்குகிறீர்கள் என்றே நான் நினைக்கிறேன். மனிதனுக்குத் தேவையானது உணவே. அது வயிறு நிறையக் கிடைத்து விட்டால் அவன் திருப்தியுடன் இருப்பான். இந்தக் கலைகளுக்குச் செலவிடும் பணத்தைக் கொண்டு மக்களுக்கு மேலும் பல வசதிகளைச் செய்து கொடுக்கலாம்'' என்றாள்.

அதைக் கேட்ட அஷ்டபதியின் முகம் வாட்டமுற்றது. அவர் ராணியின் மனம் என்ன நினைக்கிறது என்பதைப் புரிந்து கொண்டதோடு அந்த எண்ணத்தை மாற்றவும் தீர்மானித்துக் கொண்டார். ஆனால் அப்போது பேசினால் எதுவும் எடுபடாது என்று நினைத்து அவர் வேறெதுவும் பேசாமல் அங்கிருந்து சென்றார். சாரங்கதரன் ரஞ்சனாவிடம் ''மனிதனுக்கு உணவோடு பொழுது போக்கக் கலைகளும் தேவை'' என்றான். இதுபற்றி அவர்களிடையே பலத்த

—சுதா கிருஷ்ணசாமி—

விவாதம் மூண்டது.

ரஞ்சனாவோ ''மனிதனுக்குக் காற்றும் நீரும் உணவும் இருந்தாலே போதும். வேறெதுவும் தேவை இல்லை'' என்றாள். மன்னனோ ''இவை மட்டும் போதாது'' என்றான். அப்போது விதூஷகன் அங்கே வந்தான். மன்னனும் ராணியும் தம் வாதப்பிரதி வாதங்களைக் கூறி அவனது தீர்ப்பு என்ன என்று கேட்டார்கள்.

விதூஷகனுக்கும் ராணி நினைப்பது என்ன என்று தெரிந்துவிட்டது. மன்னன்கலைஞர்களுக்காகச்செலவிடுவதை அவள் வீண் செலவு எனக் கருதுகிறாள். இதைத் தடுத்து ராணியின் மனதை மாற்றினால்தான் நாட்டில் கலைகள் வளர்ச்சி பெறும்.

விதூஷகனும் சற்று யோசித்துவிட்டு சற்று தூரத்திலிருந்த ஒரு காவலாளியைக் கூப்பிட்டான். அவன் வந்ததும் அவனிடம் விஷயத்தை விளக்கி ''மனிதனுக்கு எது மிகவும் தேவை?''என்று கேட்டான். அவனும் ''உணவுதான்'' என்றான்.

விதூஷகனும் ''அப்படிச் சொல்லாதே. உணவோடு பொழுது போக்கிற்கு ஏதாவது வேண்டும். நீ வயிறு நிறைய உணவு கிடைத்தால் போதும் என்றிருப்பாயா?'' என்று கேட்டான். காவலாளியும் ''ஓ! இருப்பேனே'' என்று பதிலளித்தான்.

விதூஷகன் ராணியிடம் ''எனக்கு பதினைந்து நாள் அவகாசம் கிடைத்தால் உங்களுக்குச் சரியான விடை கூறுகிறேன்'' என்றான். ராணியும்



சரியெனவே விதூஷகன் காவலாளியை அழைத்துக் கொண்டு போய் ஒரு அறையில் விட்டுப் பூட்டினான். அவனுக்கு வேளா வேளைக்கு நல்ல உணவு அளிக்கப்பட்டது. ஒரு வாரமானதும் அவனை விதூஷகன் அழைத்துக்கொண்டு போய் மன்னன் முன்னும் ராணி முன்னும் நிறுத்தினான்.

விதூஷகன் அவனிடம் ''இந்த ஒரு வாரகாலத்தை எப்படிக்கழித்தாய்?'' என்று கேட்டான். காவலாளியும் ''ஐயோ! பொழுதே போகவில்லை. எப்போது அந்த அறையிலிருந்து வெளியே வருவேன் என்று தவித்துக் கொண்டிருந்தேன். மனிதனுக்கு வயிறு நிறையச் சாப்பாடு மட்டும் கிடைத்தால் போதுமா? பொழுது போக்கிற்கும் ஏதாவது வேண்டும்'' என்றான்.

விதூஷகன் ரஞ்சனாவைப் பார்த்து ''இதே காவலாளி முன்பு உணவிருந்தால் போதும் திருப்தி அடைந்து விடலாம் என்றான். திருப்தியாக இவனுக்கு உணவு கிடைத்ததும் இப்போது என்ன சொல்கிறான் பார்த்தீர்களா?'' என்றான்.

ரஞ்சனாவும் ''ஆமாம் கேட்டேன்'' என்றாள். எனவே விதூஷகன் ''மனிதன் வாழத்தான் சாப்பிடுகிறான். சாப்பிடுவதற்காக வாழ்வதில்லை. உணவு உடலை வளர்க்கிறது. மனமும் அறிவும் வளர வேறு பலவும் வேண்டும். அவற்றில் கலைகள் முக்கிய இடம் பெறுகின்றன'' என்றான். சாரங்கதரன் விதூஷகனைப் பாராட்டி ரஞ்சனாவைப் பார்த்தான். ரஞ்சனாவும் தன் தவறை உணர்ந்து தலைகுனிந்து கொண்டாள்.

சாரங்கதரன் ரஞ்சனாவிடம் ''பாவம்! உன் சந்தேகம் தீர இந்தக் காவலாளிதான் சிரமப்பட்டான். ஏழு நாட்கள் எவ்வளவு வேதனைபப் பட்டானோ'' என்று கூறினான்.

ரஞ்சனா உடனே தன் கழுத்திலிருந்த முத்து மாலையை எடுத்து அக் காவலாளிக்குப் பரிசாக அளித்தாள்.






துரௌபதியின் சுயம்வரத்தில் கலந்து கொள்ள பல நாட்டு மன்னர்கள் காம்பில்ய நகரத்திற்கு வந்து சேர்ந்தார்கள். அவர்கள் தங்கத் தனித்தனி விடுதிகள் அளிக்கப்பட்டன. பாண்டவர்கள் ஒரு குயவரின் வீட்டில் தங்கி இருந்தார்கள்.

துருபதன் தன் மகளை அர்ஜுனனுக்கு மணம் செய்து வைக்க எண்ணியதை யாரிடமும் கூறவில்லை. அவன் மிகக் கனமான வில்லைத் தயாரித்து சுயம்வர மண்டபத்தில் மிக உயரமான இடத்தில் சுழலும் மீனை அமைத்தான். வில்லை எடுத்து ஐந்து அம்புகளால் சுழலும் மீனை அடித்து வீழ்த்துபவனுக்கே துரௌபதியை மண முடித்துக் கொடுப்பதாக துருபதன் அறிவித்தான்.

சுயம்வரத்திற்கு திருதராஷ்டிரனின் புதல்வர்களும் கர்ணனும் கூட வந்தனர். திருமண வைபவத்தைக் காண ரிஷிகளும் முனிவர்களும் கூட வந்தார்கள். துருபதன் அவர்கள் எல்லோரையும் மரியாதையுடன் வரவேற்றுத் தக்கபடி உபசரித்தான்.

சுயம்வர மண்டபம் காம்பில்ய நகரின் வட கிழக்கே நிர்மாணிக்கப்பட்டிருந்தது. அங்கு க்ஷத்திரியர்களும் பிராம்மணர்களும் சென்று தமக்குரிய ஆசனங்களில் அமர்ந்தனர். பிராம்மணர்கள் வேடத்தில் வந்த பாண்டவர்களும் அந்தணர்களின் கூட்டத்தில் இருந்தார்கள். சுயம்வரத்திற்குச் சில நாட்களுக்கு முன்பிருந்தே எல்லோரும் வந்து சேரலானார்கள்.

சுயம்வர நாளன்று துரௌபதி




நீராடி புதிய ஆடைகளையும் விலையுர்ந்த ஆபரணங்களையும் அணிந்து கையில் மலர்மாலையுடன் மண்டபத்திற்கு வந்தாள். துருபதனின் புரோகிதர் சோமகர் ஆயுட்க்ஷேம ஹோமம் செய்து துரௌபதியை ஆசீர்வதித்தார். மங்கள வாத்தியங்கள் முழங்கின.

திருஷ்டத்யும்னன் மண்டபத்தின் நடுவே எழுந்து நின்றதும் வாத்தியங்கள் இசைப்பது நின்றது. திருஷ்டத்யும்னனும் சபையோரிடம் ''இந்த வில்லில் நாண் ஏற்றி ஐந்து அம்புகளைக் கொண்டு இம்மண்டபத்தில் உயரத்தில் சுழலும் தங்க மீனை அடித்து வீழ்த்தும் வீரனைத்தான் என் சகோதரி துரௌபதி மணந்து கொள்வாள்'' என்று அறிவித்தான்.

அதன் பின் அவன் ஒவ்வொரு அரசகுமாரனைப் பற்றியும் துரௌபதிக்குக் கூறினான். துரியோதனன், கர்ணன், சல்லியன், விராடன், சகுனி, சாம்பன், கிருஷ்ணன், அனிருத்தன், சிசுபாலன், சித்திராங்கதன், பகத்ததன் முதலிய பல அரசகுமாரர்கள் எல்லாம் துரௌபதியின் அழகைக் கண்டு பிரமித்தனர். கிருஷ்ணரோ அந்தணர்களிடையே அமர்ந்துள்ள பாண்டவர்களை அடையாளம் கண்டு கொண்டு பலராமருக்கும் அவர்களைச் சுட்டிக் காட்டினார்.

சுழலும் மீனை அடித்து வீழ்த்த ஒவ்வொருவராக அரசகுமாரர்கள் சென்றார்கள். சிலரால் கனமான வில்லை தூக்கக்கூட முடியவில்லை. வில்லைத் தூக்கிய வேறு சிலரால் நாண் ஏற்ற முடியவில்லை. கர்ணன் வில்லின் நாணை ஏற்றி அம்புகளால் மீனை அடிக்கக் குறி வைத்தான். அவன் வெற்றி பெற்றுவிடுவான் எனப் பலர் கூறியபோது துரௌபதி ''நான் இந்தத் தேரோட்டி மகனை மணக்க மாட்டேன்'' என எல்லோரும் கேட்க உரக்கக்கூறினாள். கர்ணன் கோபமுற்றாலும் சிரித்தவாறே வில்லைப் போட்டு விட்டுச் சென்றான்.

கர்ணனுக்குப் பின் வந்த அரசகுமாரர்கள் யாராலும் சுழலும் மீனை அடிக்க முடியவில்லை. இனி எந்த அரசகுமாரனும் வருவதற்கு இல்லை



என்ற நிலை ஏற்பட்டது. அப்போது அர்ஜுனன் பிராம்மணர்களிடையி லிருந்து எழுந்து வந்து சபையோரை வணங்கி அவர்களது அனுமதி பெற்று வில்லை எவ்வித சிரமமும் இல்லாமல் எடுத்து நிறுத்தி அதில் ஐந்து அம்புகளை வைத்து உயரச் சுழலும் தங்க மீனை அடித்து வீழ்த்தி னான்.

அதைக் கண்டு ஆச்சரியத்தால் எல்லோரும் கல்லாகிப் போயினர். அந்தணர்களோ ஒரு அந்தணன் வென் றானே என மகிழ்ந்துத் தம் அங்க வஸ்திரங்களைத் தூக்கி ஆட்டி தம் உணர்ச்சிகளை வெளிப்படுத்தினார் கள். தருமரோ நகுலனுடனும் சக தேவனுடனும் உடனேயே கிளம்பித் தாம் தங்கிய இடத்திற்குப் போய் விட்டார்.

துருபதனோ அர்ஜுனனைக் கண்டு பூரித்துப் போனான். ஆனால் அங்கு வந்திருந்த அரசகுமாரர்களோ தமக்குப் பெருத்த அவமானம் ஏற் பட்டு விட்டதாகக் கருதினார்கள். அவர்கள் ''இந்த துருபதன் தன் மகளை ஒரு அரசகுமாரனுக்கு மண முடித்து வைக்காமல் எப்படி ஒரு அந்தணனுக்குக் கொடுக்கலாம்? பிராம்மணர்களுக்கு சுயம்வரம் நடத் தினார்கள் என்று கேள்விப்பட்டதே இல்லை. துருபதனின் மகள் ஒரு அரசகுமாரனைத்தான் மணக்க வேண் டும். இந்த அந்தணன் துரௌபதியை மணக்கவிட மாட்டோம்'' எனக் கூறித்தம் ஆயுதங்களை எடுத்துக் கொண்டு துருபதனைச் சூழ ஓடினார் கள்.

துருபதன் பயந்து போய் ஓடி பிராம் மணர்களிடையே நின்று கொண் டான். அவனைக் காக்க பீமனும் அர்ஜுனனும் முன்னால் நின்றார்கள். அரசர்கள் அம்புகளால் தாக்க முயல வே பீமன் ஒரு மரத்தை வேரோடு பிடுங்கி அவற்றைத் தடுக்கலானான். அர்ஜுனனும் அந்த அரசகுமாரர் களைத் தடுத்து நிறுத்தித் தன் கையிலி ருந்த வில்லைக் கொண்டு தாக்க வந்த அரசகுமாரர்களை எதிர்க்கலானான்.

சல்லியனும் கர்ணனும் தம்மை எதிர்த்து நிற்பவன் ஒரு அந்தணனா னாலும் அவனைக் கொல்வதில் தவறு

எதுவும் இல்லை என்று எண்ணினார்கள். அர்ஜுனன் கர்ணனை எதிர்க்கலானான். அவனது போர்த் திறமையைக் கண்ட கர்ணன் ''அந்தணனே! இவ்வளவு திறமையுள்ள நீ உண்மையிலேயே ஒரு அந்தணன்தானா? என்னை எதிர்த்துப் போர் புரியும் திறமை அர்ஜுனன் ஒருவனுக்குத்தான் உண்டு. உண்மையைச் சொல்'' என்றான். ஆனால் அர்ஜுனன்தான் யாரென்பதை அவனிடம் கூறவில்லை. முடிவில் கர்ணன் அவனை வெல்ல முடியாதெனக் கண்டு அங்கிருந்து சென்றுவிட்டான்.



சல்லியன் பீமனைத் தாக்கினான். ஆனால் பீமன் அவனது தாக்குதல்களை எல்லாம் முறியடித்து முடிவில் அவனை பிடித்து உயரத் தூக்கி வெகு தூரத்தில் போய் விழும்படி எறிந்தான். அது கண்டு பிராம்மணர்கள் யாவரும் கைகொட்டிச்சிரித்தார்கள். அரசகுமாரர்களுக்கோ இது அவமானமாக இருந்தது.

அப்போது எல்லேருக்கும் அந்த இருவரும் சாதாரண பிராம்மணர்கள் அல்ல என்று தெரிந்து போயிற்று. அவர்கள் யாரென்று அறிந்து கொள்ள அவர்களுக்கு மிகுந்த அவா ஏற்பட்டது. அப்போது கிருஷ்ணர் ''அந்த அந்தணன் நேர்வழியில் தன் திறமையைக் காட்டி துரௌபதியை அடைந்தான். தன்னை எதிர்த்த அரசகுமாரர்களையும் வெற்றிகரமாக எதிர்த்து நிற்கிறான். எனவே அவனுக்கு எவ்விதத் தீங்கும் இழைக்கக் கூடாது'' என்று கூறினார். அதுகேட்டு அரசகுமாரர்கள் கிருஷ்ணர் கூறியபடி எதுவும் செய்யாமல் திரும்பிப் போய் விட்டார்கள்.

குயவனின் வீட்டிலிருந்த குந்தி தன் மைந்தர்கள் போய் வெகு நேரமாகியும் திரும்பி வராததால் மிகவும் கவலைப்படலானாள். சுயமவரத்தில் துரியோதனன் அவர்களை அடையாளம்கண்டு கொண்டு அவர்களுக்கு ஏதாவது தீங்கிழைத்திருப்பானோ என எண்ணி பயந்தாள். அப்போது தருமர் நகுலனுடனும் சகதேவனுடனும் வரவே அவளது மனம் சற்று ஆறுதல் அடைந்தது.

அதற்குச் சற்று நேரத்திற்குப் பின்



விட்டேன். என் வார்த்தையும் பொய் யாகாமல் நியாயத்திற்கு ஏற்ப எதைச் செய்ய வேண்டுமோ அதை யோசித்து நீ கூறு'' என்றாள்.

தருமரும் சற்று யோசித்து ''அம்மா! கவலைப்படாதே. அர்ஜுனன் இவளை அக்கினிச் சாட்சியாக மணந்து கொள்ளட்டும்'' என்றார். அர்ஜுனனோ ''அது எப்படி? எனக்கு மூத்தவர்கள் மணமாகாமல் இருக்க நான் மட்டும் எப்படி மணம் புரிந்து கொள்வேன்?'' என்று கேட்டான். அவர்கள் பேசியதை எல்லாம் கேட்டு விட்டு குந்தி தருமரைப் பார்க்கவே, அவரும் சற்று யோசித்து விட்டு ''சரி. நாம் ஐவருமே இவளை மணந்து கொள்வோம'' என்றார்.

இதே சமயம் கிருஷ்ணர் பலராம ருடன் அங்கு வந்தார். அவர் புன்னகை புரிந்தவாறே குந்தி தேவியையும் அந்தணர் வேடத்திலிருந்த தருமரை யும் வணங்கினார். தருமரோ ''கிருஷ் ணரே! நாங்கள் அந்தணர்கள் வேடத் தில் இருப்பதை எவ்வாறு கண்டு பிடித்தீர்கள்?'' என்று கேட்டார்.

கிருஷ்ணரும் ''நெருப்பை ஒளித்து வைக்க முடியுமா? அர்ஜுனா! இன்று சுயம்வர மண்டபத்தில் நீ காட்டிய திறமையால் நீ தான் அர்ஜுனன் என்பது தெரிந்துவிட்டதே. துரியோ தனன் உங்களை எல்லாம் ஒழிக்கச் சதி செய்தான். அதுதான் முடிய வில்லையே. நீங்கள் இப்படி மாறு வேஷத்தில் இருந்து வருவதால்தான்

பீமனும் அர்ஜுனனும் துரௌபதி யுடன் அங்கு வந்து சேர்ந்தார்கள். வீட்டிற்குள் நுழையும் போதே ''அம்மா! பிக்ஷம் கொண்டு வந்திருக் கிறோம்'' என்று கூறினார்கள். குந்தி யும் உள்ளிருந்து வழக்கம் போல ''எல்லோரும் சமமாகப் பங்கிட்டுக் கொள்ளுங்கள்'' என்று கூறியபடியே வெளியே வந்தாள். அங்கு அழகிலும் அழகான துரௌபதியைக் கண்டு அவள் திகைத்து நின்றாள்.

தருமரிடம் குந்தி ''தருமா! நான் பெரும் தவறைச் செய்துவிட்டேன். பீமனும் அர்ஜுனனும் 'பிக்ஷம்' கொண்டு வந்ததாகக் கூறியதும் வழக் கம் போல எல்லோரும் சமமாகப் பங்கிட்டுக் கொள்ளுங்களென்று கூறி

நீங்கள் ஆபத்தில்லாமல் இருக்கிறீர்கள். இதுதான் சரி. இப்படியே நல்ல விதமாக இருந்து வாருங்கள்'' என்று கூறி பலராமருடன் அங்கிருந்து சென்றார்.

இதே சமயம் துருபதனின் மகன் திருஷ்ட்த்யும்னன் ஒரு வேலை செய்தான். சுயம்வர மண்டபத்தில் உயரச் சுழன்ற தங்க மீனை அடித்து வீழ்த்திய அந்தணன் யார் என்றும் அவன் எங்கே இருக்கிறான் என்றும் அறிய விரும்பினான். எனவே அர்ஜுனனும் பீமனும் துரௌபதியை அழைத்துக் கொண்டு சென்ற போது அவர்களைப் பின் தொடர்ந்து சென்றான். அவர்கள் ஒரு குயவனின் வீட்டில் நுழைவதைக் கண்டு அங்கேயே ஓரிடத்தில் மறைந்து கொண்டு அவர்கள் பேசுவதைக் கேட்கலானான்.

கிருஷ்ணரும் பலராமனும் சென்ற பின் நகுலனும் சகதேவனும் யாவரும் உண்ண உணவு கொண்டு வந்தார்கள். குந்திதேவி துரௌபதியை அழைத்து ''இதில் கொஞ்சம் எடுத்து அதிதிகளுக்கு வை. மீதத்தில் பாதியை பீமனுக்கும் மற்ற பாதியை எல்லோருக்கும் சமமாகப் பங்கிடு'' என்றாள்.

எல்லோரும் சாப்பிட்டுவிட்டுப் படுத்தனர். அப்போது பாண்டவர்கள் போர் முறைகள் பற்றியும் பல்வித ஆயுதங்களை எவ்வாறு பயன்படுத்துவது என்று விவாதிக்கலானார்கள். இவற்றையெல்லாம் மறைந்திருந்து கேட்ட திருஷ்டத்யும்னன் அவர்கள் அந்தணர் வேடத்திலுள்ள க்ஷத்திரியர்களே என அறிந்து மகிழ்ந்து போய்த் திரும்பிச் சென்றான்.

அவன் தன் தந்தையிடம் ''இங்கிருந்து கிருஷ்ணாவை இருவர் அழைத்துச் சென்றனர். அங்கு வேறு மூன்று அந்தணர்களும் அவர்களது தாயும் இருந்தனர். அவர்கள் பேச்சிலிருந்து அவர்கள் பாண்டவர்களே என்று தெரிகிறது'' என்றான். அது கேட்டு துருபதன் மகிழ்ந்து அவர்களைப் பற்றி மேலும் விவரங்கள் அறிய தன் புரோகிதரை அனுப்பினான்.



# அதுவும் ஓசியா!

மடத்துக் குளத்தில் வட்டிக்கு வட்டி வாங்கும் வைரவன் இருந்தான். அவனை ஊரார் 'கருமி' என்று கூறிய போதிலும் அவன் அதை லட்சியம் செய்யவில்லை. மேலும் அவன் ''பணம் இல்லாதவன் கருமியாக இருக்க முடியாது. பணம் இருப்பவனுக்குக் கருமித்தனம் மிகவும் தேவை. அதனால்தான் அவனிடம் பணம் இருக்கும். பிறர் கடன் கேட்டால் வட்டிக்குக் கொடுக்கவும் முடியும்'' எனக் கூறி வந்தான்.

ஒரு நாள் வைரவன் தன் வயலிலிருந்து வீடு திரும்பும் போது செருப்பு தைத்து விற்கும் செல்லய்யாவின் கடைப் பக்கமாகச் சென்றான். வைரவன் தன் கடை பக்கம் வருவது கண்டு அவன் செருப்பு வாங்கத்தான் வருகிறான் என்று செல்லய்யா எண்ணி ''ஐயா! நகரில் முப்பது ரூபாய்க்கு விலைபோகும் செருப்பை உங்களுக்குப் பதினைந்து ரூபாய்க்குக் கொடுக்கிறேன்'' என்றான்.

வைரவனோ ''தேய்ந்து போகக் கூடிய கால்களுக்குத் தேய்ந்து போகும் செருப்பு எதற்கு? நான் இங்கே வந்தது செருப்புக்காக அல்ல. வழியில் ஒருவர் சுருட்டுக் கொடுத்தார். அதைப்பற்ற வைக்க அவரிடம் நெருப்புப் பெட்டி இல்லை. நீதான் சுருட்டு குடிப்பவனாயிற்றே. எங்கே நெருப்புப் பெட்டியைக் கொடு. சுருட்டைப் பற்ற வைத்துக் கொள்கிறேன்'' என்றான்.



# கடலி மரம்

சதுப்பான நிலத்திலும் ஆறுகளின் கரை ஓரங்களில் புதர்ளிடையே வளரும் இந்த மரம் மிக அழகான மலர்களைக் கொடுக்கிறது. இம்மலர்களை ராணிப்பூ என்று கூறுகிறார்கள். ஸ்வீடனின் தாவரஇயல் அறிஞர் மாக்னஸ் வீ. லாஸர் ஸட்ராம் இதனைப ப்ளாஸ் ரேஜின் (ராணிப்பூ) என்று வர்ணிக்கிறார். அவர் பெயரிலேயே இம்மரத்திற்கும் தாவர இயலில் லாஸர்ப் ரோமியா ப்ளாஸ் ரேஜின் எனக் கூறுகிறார்கள்.

இதில் கொத்துக் கொத்தாக மலர்கள் மலரும். இதழ்கள் மடிப்புகள் கொண்டதாக இருக்கும். இவை ஆண்டிற்கு இரு முறை அதாவது ஏப்ரல்-மே மாதங்களிலும் ஜூலை ஆகஸ்ட் மாதங்களிலும் பூத்துக் குலுங்கும். மலர்கள் அழகாயும் கவர்ச்சிகரமாயும் இருக்கும். இளம் ரோஜா நிறத்திலுள்ள இம்மலர்கள் வாடி விழுந்தால் வெள்ளையாக ஆகிவிடும். இதன் இலைகள் பச்சை நிறமாய் ஏப்ரல் மே மாதங்களில் துளிர் விடும். காய்கள் பச்சை நிறத்திலும் கருநிறத்திலும் இருக்கும். பழங்கள் நீண்ட காலம் மரத்திலேயே இருக்கும்.



தேக்கு மரத்திற்குப் பின்இந்த மரமே உறுதியானது எனக் கூறுகிறார்கள். இதனைப் படகுகள் செய்யவும் மேஜை கள் செய்யவும் பயன்படுத்துகிறார்கள். நீரை எதிர்த்து நீண்ட காலம் இது இருக்குமாதலால் துறைமுகங்களிலும் படகுத்துறைகளிலும் கம்பங்களாக இதனைப் பயன்படுத்துகிறார்கள். இது பல நாடுகளிலும் பயன்படுத்தப்படுவ தால் நம் நாட்டின் இந்த மரத்திற்கு நல்ல பெயர் கிடைத்தும் உள்ளது.

நம் நாட்டு முனிவர்கள்—5

# மார்க்கண்டேயர்



இமய மலைப் பகுதியில் வாழ்ந்த வந்த மிருகண்டு முனிவருக்கு நீண்ட காலமாகக் குழந்தையே பிறக்கவில்லை. அதனால் அவர் சிவபிரானை நோக்கித் தவம் புரியவே அவரும் அம்முனிவரின் முன் தோன்றி ''உனக்கு பதினாறு வயது அறிவுள்ள மகன் வேண்டுமா அல்லது நூறு வயது அறிவற்ற மகன் வேண்டுமா?'' என்று கேட்டார்.

மிருகண்டு பதினாறு வயது அறிவுள்ள மகன் வேண்டும் எனக் கேட்டார். சிவனும் அந்த வரம் கொடுக்கவே மிருகண்டுவுக்கு விரைவில் மகன் பிறந்தான். அவனுக்கு அவனது பெற்றோர் மார்க்கண்டேயன் என்று பெயரிட்டார்கள். மார்க்கண்டேயருக்குப் பத்து வயதாகும் போதே அவரிடம் சந்தேகம் கேட்க பண்டிதர்களும் பேரறிஞர்களும் தொலை தூரத்திலிருந்து வந்தார்கள். அவருக்குப் பனிரெண்டு வயதான போது அவரை குருவாக ஏற்றுப் பல சீடர்கள் வந்தார்கள். அதனால் அவர் முனிவரெனப் பெயர் பெற்றார்.

ஆனால் நாட்களாக ஆகத் தம் பெற்றோர் கவலைப்படுவது கண்டு மார்க்கண்டேயர் அதன் காரணத்தைக் கேட்டார். அப்போது அவர்கள் சிவனார் வரம் பற்றிக் கூறி அவருக்குப் பதினாறாவது வயதில் மரணம் ஏற்படும் என்று சொல்லிக் கண்ணீர் வடித்தார்கள்.

மார்க்கண்டேயர் தம் பெற்றோர்களுக்கு ஆறுதல் கூறினார். பின்னர் அவர் ஆலயத்தில் சிவலிங்கத்தின் முன் அமர்ந்து சிவத் தியானத்தில் ஆழ்ந்தார். பதினாறு வயதாகி விட்டதால் அவரது உயிரை எடுத்துச் செல்ல எமதூதர்கள் அங்கு வந்தார்கள். ஆனால் அவரது தேஜஸ் அவர்களை அவரிடம் அணுக விடவில்லை.

அவர்கள் திரும்பிச் சென்றபின் எமனே மார்க்கண்டேயரின் உயிரைக் கவர வந்தான். மார்க்கண்டேயர் சிவ லிங்கத்தோடு ஒட்டி இருக்கவே எமன் பாசக் கயிறு போட்டு சிவலிங்கத்தோடு மார்க்கண்டேயரைச் சேர்த்து இழுத் தான்.

சிவலிங்கத்திலிருந்து சிவபெருமான் வெளிவந்து எமனை வீழ்த்த, அவன் இறந்தான். இதனால் சிவனுக்கு மிருத் யுஞ்ஜயர் (எமனை வென்றவர்) என்ற பெயர் ஏற்பட்டது. கோபம் தணிந்து சிவன் எமனை உயிர்ப்பித்தார். அவர் "நான் மார்க்கண்டேயர் பதினாறு வய தில் இறப்பான் என்று கூறவில்லை. அவன் என்றும் பதினாறு வயதுடைய வனாகவே தான் இருப்பான்" என்று கூறி மறைந்தார். மார்க்கண்டேயரும் சிரஞ்சீவியாக மரணமற்றவராக வாழ்ந் தார்.

மரணத்தை வென்று என்றும் இளமையுடன் இருக்க தியானமே சிறந்தது என்று இதனால் விளக்கப் பட்டுள்ளது.



# உங்களுக்குத் தெரியுமா?

1. புத்தர் தமது மதப் பிரசாரத்தை முதலில் எங்கு தொடங்கினார்?
2. ஹிட்லர் 1938ல் கைப்பற்றி 1945ல் விட்டு விட்ட நாடு எது?
3. தரையில் ஊர்ந்துச் செல்லும் பிராணிகளில் மிகப் பெரியது எது?
4. அர்ஜுன் அவார்ட் பெற்ற முதலாவது இந்தியக் கிரிக்கெட் வீரர் யார்?
5. கானாவின் முந்தைய பெயர் என்ன?
6. கல்கத்தாவை யார் நிர்மாணித்தார்?
7. சாதாரணமாக யானை எவ்வளவு காலம் உயிர் வாழும்?
8. எகிப்தின் பெரும்பான்மை மக்கள் பேசும் மொழி யாது?
9. அபிஸீனியாவின் தற்போதையப் பெயர் என்ன?
10. கவிகளுக்குக் கவி எனப் பெயர் பெற்ற ஆங்கிலக் கவி யார்?
11. இத்தாலியின் புழங்கு நாணயத்தின் பெயர் என்ன?
12. நம் புராணத்தில் வரும் ஐராவதம் யாருடைய வாகனம்?
13. முதன் முதலில் வானவெளியில் நடந்தவர் யார்?
14. மிக உயரமான தரைவாழ் பிராணி எது?
15. பார்ஸிகளின் புனித நூல் எது?
16. ஏஞ்ஜல் ஃபால்ஸ் என்னும் நீர்வீழ்ச்சி எங்கே உள்ளது?
17. வாடர்லூவில் நெப்போலியனைத் தோற்கடித்தவர் யார்?
18. பாகிஸ்தானின் முதல் அதிபர் யார்?
19. கனடாவில் மிக நீளமான நதி எது?

## விடைகள்

1. வாரணாசியருகேயுள்ள சாரநாத்.
2. ஆஸ்ட்ரியா.
3. முதலை.
4. சலீம் துரானி 1961ல்.
5. கோல்ட் கோஸ்ட்.
6. பாப் சார்னாக்.
7. 70-80 வருடங்கள்.
8. அராபிய மொழி
9. எதியோபியா.
10. எட்மண்ட் ஸ்பென்ஸர் (1552-1599).
11. லீரா.
12. தேவேந்திரன்.
13. அலெக்ஸ்லியோனாவ் (1965).
14. ஒட்டைச்சிவிங்கி.
15. ஜெண்ட் அவஸ்தா.
16. வெனிஜுவெலா.
17. ஆர்தர் வெல்லஸ்லி.
18. மகம்மதாலி ஜின்னா.
19. மெகன்ஜி.



# சொல்வார் பேச்சு!

சுந்தரத்தின் ஒரே மகள் சுகாசினி. அவள் அழகோடு நற்குணங்களும் நிரம்பியவள். அவளுக்கு விவாக வயதும் வந்தது. அப்போது அடுத்த ஊர் அருணாசலம் சுகாசினியைத் தன் மகன் ஆனந்தனுக்கு மணம் செய்து கொள்ள விரும்புவதாகத் தகவல் அனுப்பினார். அருணாசலம் எப் படிப்பட்டவர், தன் அந்தஸ்த்திற்கு ஏற்றவர்தானா என்பதை எல்லாம் நேரில் கண்டு வரலாம் என்று எண்ணி சுந்தரம் அடுத்த ஊருக்குச் சென்றார்.

அருணாசலம் பெரும் பணக் காரரே. நன்கு படித்தவர். பண்புடை யவர். அவர் சுந்தரத்தை வரவேற்றுத் தக்கப்படி உபசரித்து ''உங்கள் மகள் சுகாசினியைப் பற்றிப் பலர் புகழக் கேட்டேன். இப்படிப்பட்ட பெண் தான் என் வீட்டு மருமகளாக வர வேண்டுமென விரும்புகிறேன். எனக்கு வரதட்சணை வேண்டாம். விவாகத்தையும் எளிய முறையில் நடத்தினால் போதும்'' என்றார்.

அந்த ஒரே நாளில் அருணாசலத் தின் நற்குணமும் உயரிய பண்பும் சுந்திரத்திற்குத் தெரிந்த போயிற்று. அவர் பேசிய விதமும் சுந்தரத்தின் மனதைப் பெரிதும் கவர்ந்துவிட்டது.

சுந்தரமும் தான் அருணாசலத்தின் வீட்டில் தாராளமாகச் சம்மந்தம் செய்து கொள்ளலாம் என்று எண்ணி மகிழ்ந்து தம் ஊருக்கு வந்தார். தம் வீட்டாரிடமும் தன் மகளை அருணா சலத்தின் மகன் ஆனந்தனுக்கு விவா கம் செய்து வைக்கத் தனக்கு முழு சம்மதமே என அவர் தெரிவித்தார்.

இதற்கு இரண்டொரு நாட்களுக் கும் பின் கந்தன் என்பவன் சுந்தரத் தைக் கண்டு ''ஐயா! அடுத்த ஊர் அருணாசலம் உங்களைப் பற்றி கேவலமாகப் பேசுகிறாராம். நீங்கள் பரம ஏழையாம். குப்பை மேட்டில்

—மகாதானபுரம் கிருஷ்ணன்—



டும். இந்தக் கல்யாணத்தை நடத்த விடக் கூடாது என்று கூட யாராவது முயலலாம். எனவே இதெல்லாம் எவ்வளவு தூரம் உண்மை என்று நீயே போய் அருணாசலத்திடம் கேட்டு அதன்பின் முடிவு எடு'' என்றார்.

சுந்தரமும் சற்று யோசித்துத் தன் தந்தை கூறியபடி செய்வது எனத் தீர்மானித்து அடுத்த ஊருக்கு கிளம்பினார். வழியில் அவர் ஒரு குடியானவனைக் கண்டார். அவனும் ''ஐயா! நான் அடுத்த ஊர் அருணாசலத்திற்கு என் நிலத்தை விற்றேன். அவரோ என் நிலம் பொட்டலானது என்றும் எனக்கு தானம் கொடுத்தது போல அதற்குப் பணம் கொடுத்ததாக எல்லோரிடமும் கூறி வருகிறாராம். அது பற்றி அவரிடம் கேட்கவே போய்க் கொண்டிருக்கிறேன்'' என்றான்.

சுந்தரமும் ''நானும் இது போன்ற நிலையில்தான் இருக்கிறேன். அந்த அருணாசலம் என்னைப் பற்றி எல்லோரிடமும் கேவலமாக் கூறி வருகிறாராம். அது பற்றிக் கேட்கவே நான் அவரை சந்திக்கப் போகிறேன். இருவரும் சேர்ந்தே போகலாம்'' என அவனையும் அழைத்துக் கொண்டு சென்றார். அவர்கள் கொஞ்ச தூரம் போனதும் ஒரு வியாபாரி தன் குதிரை வண்டியைச் சரி செய்து கொண்டிருப்பதைக் கண்டார்கள். அந்த வியாபாரி ஒரு நெருக்கடியான நிலையில் அருணாசலத்திடமிருந்து ஐயாயிரம்

சுகாசினி இருக்கிறாளாம். அதனால் அந்த மாணிக்கத்தை தன் வீட்டில் சேர்த்துக் கொள்ள உங்களிடம் தந்திரமாகப் பேசி உங்கள் மகளைத் தன் மகனுக்குக் கல்யாணம் செய்து வைக்க ஏற்பாடு செய்துவிட்டாராம். இப்படி எல்லாம் அருணாசலம் சொல்லி வருகிறாராம்'' என்றான்.

கந்தன் சொன்னதை எல்லம் சுந்தரம் கேட்டு ஆத்திரப்பட்டு ''அப்படியா? இனி அந்த அருணாசலத்தின் சம்மந்தமே வேண்டாம்'' என்று கத்தினார். அப்போது அவனது தந்தை மந்திரமூர்த்தி ''அவசரப்படாதே. யாரோ வந்து எதையாவது சொல்லி விட்டுப்போனால் உடனே நம்பிவிடுவதா? எதையும் தீர விசாரிக்க வேண்

ரூபாய் கடன் வாங்கினாராம். அதைக் கொண்டு வியாபாரம் நன்கு நடத்தி லாபமடைந்து அவர் கடனை வட்டியும் முதலுமாகச் செலுத்தி விட்டாராம். அப்படி இருந்தும் அருணாசலம் அவரை நன்றி கெட்டவன் எனக் கூறி வருகிறாராம். அதுபற்றி அவரிடம் கேட்கவே அவர் போய்க் கொண்டிருக்கிறாராம்.

சுந்தரமும் தானும் குடியானவனும் அதே போலக் கேள்வி கேட்க அருணாசலத்தைப் பார்க்கப் போவதாகக் கூறவே வியாபாரியும் அவர்களைத் தன் வண்டியில் தன்னோடு வருமாறு கூறினார். சற்று நேரத்தில் வண்டியும் சரியாகி விடவே மூவரும் கிளம்பினர்.

வண்டி கொஞ்ச தூரம் போனதும் அவர்கள் ஒரு கவிஞனைக் கண்டார்கள். அவனை அருணாசலம் ஒரு ஜமீன்தாரருக்கு அறிமுகப்படுத்தவே கவிஞன் பணமும் புகழும் பெற்றுவிட்டனாம். ஆனால் அருணாசலம் தன்னைப் பற்றிக் காவியம் எழுதவில்லையே என்று கவிஞன் மீது கோபம் கொண்டிருக்கிறாராம். அது பற்றி அவரிடம் கேட்கவேதான் போய்க் கொண்டிருப்பதாகக் கவிஞன் கூறினான்.

மற்ற மூவரும் தாமும் அவரிடம் தம்மைப் பற்றி அருணாசலம் கேவலமாகப் பேசுவதாயும் அதனால் அது பற்றி அவரிடம் கேள்விகள் கேட்கவே போவதாகக்கூறி கவிஞனையும் வண்டியில் ஏற்றிக் கொண்டார்கள். வண்டி அடுத்த ஊரை அடைந்து





அருணாசலத்தின் வீட்டை அடைந்த போது மாலையாகி விட்டது. அப் போது அருணாசலம் தன் வீட்டுத் திண்ணையில் உட்கார்ந்து யாரி டமோ பேசிக் கொண்டிருந்தார்.

தன் வீட்டின் முன் வண்டி நின்று அதிலிருந்து இறங்கிய நால்வரைக் கண்டதும் அவர் அவர்களை அன் புடன் வரவேற்றார். அவர்களை உள்ளே அழைத்துப் போகும்படித் தன் வேலையாட்களிடம் கூறினார். அவர் காட்டிய மரியாதையையும் கூறிய அன்பு மொழிகளையும் கேட்டு நால்வரும் எதுவுமே பேச முடியாமல் நின்றனர். அவர்கள் வீட்டினுள் போகவும் தயங்கினார்கள்.

அப்போது திண்ணை மீதிருந்த வன் அருணாசலத்திடம் ''ஐயா! என் விஷயத்தில் முடிவாக ஒன்றும் சொல்லவில்லையே'' என்று கேட் டான். அருணாசலமும் ''சொல்வ தற்கு என்ன இருக்கிறது? நான் ஒரு தடவை வாக்குக் கொடுத்துவிட்டால் அதன்படித்தான் நடப்பேன். தெரிந் ததா?'' என்றார்.

அப்போது அந்த மனிதன் திண்ணையிலிருந்து இறங்கி சுந்தர மும் மற்ற மூவரும் நின்ற இடத்திற்கு வந்து ''ஐயா! நீங்களே நியாயம் கூறுங்கள். இந்த ஊரில் இவருக்கு ஒரு ஓட்டு வீடு உள்ளது. முதலில் இவர் அங்குதான் இருந்தார். சில வருடங் களுக்கு முன்பு தான் இந்த வீட்டிற்கு வந்தார். இப்போதும் அந்த ஓட்டு வீட்டைத் தம் விருந்தினர்கள் தங்கப் பயன்படுத்தி வருகிறார். அந்த வீடு தனக்கு வேண்டுமென்று சீனய்யன் என்பவன் கேட்கவே இவர் குறைந்த விலைக்கு விற்கச் சம்மதித்து விட் டார். சீனய்யனும் பணத்திற்கு ஏற் பாடு செய்து கொண்டிருக்கிறான். நான் சீனய்யனின் அதிர்ஷ்டத்தை யும் இவரது பெருந்தன்மையையும் புகழ்ந்து கூறினேன். அவனோ ''அது பேய் பிடித்து வீடு. அதை வாங்கு வோர் இல்லை. அதை அருணாசலம் என் தலையில் கட்டுகிறார். இதில் என் அதிர்ஷ்டமும் இல்லை. அவரது பெருந்தன்மையும் இல்லை'' என் கிறான். இப்படிப்பட்டவனுக்கு இவர் வீட்டைக் கொடுக்கக் கூடாது

என்றும் எனக்கு அந்த வீட்டை விலைக்குக் கொடுக்கும்படிக் கேட்டால் இவர் சீனய்யனுக்கு வாக்குக் கொடுத்து விட்டதாகக் கூறுகிறார். இது சரியா?'' என்று கேட்டான்.

அப்போது அருணாசலம் ''இதோ பார் வீரப்பா! நீ சீனய்யனைப் பற்றி அவன் இங்கு இல்லாதபோது குறை கூறுவது தவறு. என்னைப் பற்றி மறைவாகப் பலர் ஏதேதோ சொல்லிக் கொண்டுதான் திரிகிறார்கள். அதை எல்லாம் நான் பொருட்படுத்துவதும் இல்லை. என்ன கூறினாலும் அதபற்றிக் கவலைப்பட மாட்டேன். ஏனெனில் இம்மாதிரிக் குறை கூறுபவர்கள் ஏதாவது ஒரு நோக்கத்தோடு தான் கூறுவார்கள். இதை நானும் நம்ப மாட்டேன். என் நண்பர்களான இவர்களும் நம்ப மாட்டார்கள். இனி நீ போகலாம்'' என்று கூறினார்.

அது கேட்டு சுந்தரமும் அவரோடு வந்தவர்களும் எதுவும் பேசமுடியாது நின்றனர். அவர்கள் அருணாசலத்திடம் கேட்க வந்தது எவ்வளவு தவறு என்றும் அவர் எவ்வளவு உயர்ந்தவர் என்றும் புரிந்து கொண்டார்கள். தாமும் பிறர் சொன்னதைக் கேட்டுத் தானே அதுபற்றி அவரிடம் கேட்க வந்தோம் என எண்ணி அவர்கள் வெட்கப்பட்டார்கள்.

சுந்தரமும் மற்றவர்களும் ''நாங்கள் ஒரு வேலையாக இவ்வழியாகச் சென்று கொண்டிருந்தோம். உங்களையும் மரியாதைக்காகப் பார்த்து விட்டுப் போகலாம் என்றே வந்தோம். அவ்வளவுதான். வேறு விசேஷமில்லை'' என்று கூறிவிட்டு அவரை வணங்கினார்கள். பின் அவர்கள் எல்லோருமே வண்டியில் ஏறிக் கொண்டு சென்றார்கள்.

இவர்கள் ஏன் வந்தார்கள், ஏன் உடனேயே கிளம்பிப் போகிறார்கள் என்று எண்ணி அருணாசலம் ஆச்சரியப்பட்டார்! வண்டியில் சென்றவர்களோ அருணாசலம்தான் எவ்வளவு உயர்ந்தவர் என்றும் மனிதருள் மாணிக்கம் என்றும் புகழ்ந்து கொண்டே சென்றனர்.





# அவசரக்காரன்

நாராயண சாஸ்திரி எதிலும் அவசரப்படுபவர். ஒருமுறை அடுத்த ஊரில் ஒரு கல்யாணம் செய்து வைக்க அவர் போக வேண்டி வந்தது. அதனால் அவர் தன் மனைவியிடம் ''நாளை காலையில் சூரியோதய வேளைக்கே முகூர்த்தம். அதனால் விடிவதற்கு முன் நான்கு மணிக்கே இங்கிருந்து கிளம்ப வேண்டும்'' என்றார். இதைச் சில திருடர்கள் கேட்டு அங்கேயே பதுங்கி இருந்தார்கள்.

சாஸ்திரி அதிகாலையில் எழுந்து தன் மனைவியிடம் ''நான் போய் வருகிறேன். வாசல் கதவை மூடித் தாளிட்டுக் கொள்'' என்று கூறிவிட்டுக் கிளம்பிச் சென்றார். அவரது மனைவியும் கதவைத் தாளிட்டு விட்டு போய் படுத்துக் கொண்டாள். சாஸ்திரி போனதுமே திருடர்கள் வீட்டில் அவரது மனைவி மட்டும் இருப்பதை அறிந்து கன்னம் வைத்து வீட்டிற்குள் சென்றார்கள்.

வீட்டினுள் விளக்குகூட எரியவில்லை. ஒரே இருட்டாக இருந்தது. இது நமக்கு அனுகூலமே எனத் திருடர்கள் எண்ணினார்கள். அப்போது சாஸ்திரி திரும்பி வந்து வாசல் கதவைத் தட்டித் தம் மனைவியை அழைத்தார். அவளும் கதவைத் திறக்கவே அவரும் ''மேல் துண்டை மறந்துவிட்டேன்'' என்று கூறி அதை எடுத்துக் கொண்டு போனார்.

அவர் போனதும் அவரது மனைவி கதவைத் தாளிட்டு விட்டுப் படுத்தாள். சற்று நேரம் ஆகட்டும் எனத் திருடர்கள் எண்ணி சுற்றிலும் பார்த்தார்கள். ஓரிடத்தில் அரிசி இருப்பது கண்டு அதன் பக்கத்தில் ஒரு துணியை எடுத்து அதில் அரிசியை எடுத்து அள்ளிப் போட்டு மூட்டையாகக் கட்டி எடுத்துப் போக நினைத்தார்கள். இதற்குள் மறுபடியும் சாஸ்திரி

—எஸ். வெங்கடராமன்—

திரும்பி வந்து கதவைத் தட்டித் தம் மனைவியைக் கூப்பிட்டார்.

அவளும் கதவைத் திறந்து கொண்டு வரவே அவரும் "என் பையை மறந்து விட்டேன். அதை எடுத்துக் கொண்டு வந்து கொடு" என்றார். அவளுக்கு அவரது பை இருக்குமிடம் தெரியும். அதனால் அந்த இருட்டிலும் உள்ளே போய் அது இருக்குமிடத்திலிருந்து அவள் அதை எடுத்து வந்து அவரிடம் கொடுத்தாள். அவர் அதை வாங்கிக் கொண்டு போகவே அவள் கதவைத் தாளிட்டு விட்டு உள்ளே வந்தாள்.

அவள் காலில் திருடர்கள் விரித்து வைத்த துணி படவே அவள் அதைச் சுருட்டி எடுத்துக் கொண்டு தன் படுக்கையருகே வைத்து விட்டுப் படுத்துத் தூங்கினாள். திருடர்களும் சற்று நேரமானதும் தாம் விரித்த துணி அங்கேயே இருப்பதாக எண்ணி அந்த இடத்தில் அரிசியைக் கொட்டினார்கள். பிறகு அதை மூட்டையாகக் கட்டத் துணியின் முனைகளைத் தேடினார்கள் அவை கிடைக்கவே இல்லை. ஏனெனில் அவர்கள் விரித்த துணிதான் அங்கே இல்லையே!

அவர்கள் என்ன செய்யலாம் என நினைத்த போது மறுபடியும் சாஸ்திரி வந்து கதவைத் தட்டினார். அவரது மனைவியும் எழுந்து "நன்கு விடிந்து விட்டதே. இன்னமும் நீங்கள் போகவில்லையா" என்று கூறிக் கொண்டே வந்து கதவைத் திறந்தாள்.

விடிந்துவிட்டது என்று கேட்டதும் திருடர்கள் பயந்து எதையும் எடுக்காமல் கன்னம் வைத்த வழியில் தப்பி ஓடி விட்டார்கள். அது மட்டுமல்ல, அவர்கள் அப்போது பயத்தில் தம்மிடமிருந்தபணப்பையையும்அவ் வீட்டிலேயேவிட்டுவிட்டுப்போனார்கள்.

சாஸ்திரி இம்முறை தாம் எடுத்துச் செல்ல வேண்டிய பொருள்களை எல்லாம் மறக்காமல் எடுத்துச் சென்றார். அவரது அவசரப்படும் இயல்பால் இம்முறை அவருக்கு லாபமே ஏற்பட்டது.



Say "Hello" to text books and friends
'Cause School days are here again
Have a great year and all the best
From Wobbit, Coon and the rest!





It's time to go back to school again. Time for text books. Time for games. Time to meet old friends. And make new ones. Time to start studying again. Because there's so much to learn about the world around you.

From all of us here at Chandamama, have a great year in school. And remember to tell us what you've learnt everyday, when you come home from school !

SUPER RUBBER

THE

HANDAMAMA

OLLECTION

ARTIG 1246

# போட்டோ வாக்கியப் போட்டி :: பரிசு ரூ.100

இந்தப் போட்டியின் வெற்றி பெற்ற தலைப்புகள் 1995 அக்டோபர் மாத இதழில் வெளியிடப்படும்.



A. Seethadevi



A. Seethadevi

★ தலைப்புகள் ஒரு வார்த்தையிலிருந்து நாலைந்து வார்த்தைகளுள் இருக்கலாம். இரு தலைப்புகளுக்கும் தொடர்பு இருக்க வேண்டும். ★ ஆகஸ்ட் 20-ம் தேதிக்குள் போட்டிக்கான தலைப்புகள் எமக்கு வந்து சேர வேண்டும்.

★ எம்மிடம் வந்து சேர்ந்த தலைப்புகளில் நாம் சிறந்ததாகக் கருதும் தலைப்புகளுக்கு ரூ.100/- பரிசு, இது இரு தலைப்புகளுக்கும் சேர்ந்ததே. ★ தலைப்புகளை தபால் கார்டில் மட்டுமே எழுதி கீழ்க்கண்ட முகவரிக்கு அனுப்பவும்.

'அம்புலிமாமா, போட்டோ வாக்கியப் போட்டி', சென்னை-600 026.

---

## ஜூன் மாதப் போட்டி முடிவு

முதலாவது போட்டோ : உழைத்ததனால் களைப்பு.
இரண்டாவது போட்டோ : களைப்பு தீரக் குளிப்பு.
பரிசு பெற்றவர் : பி. காந்திமதி, மதுரை-16.




**Printed by B.V. REDDI at Prasad Process Private Ltd., 188 N.S.K. Salai, Madras 600 026 (India) and Published by B. VISHWANATHA REDDI on behalf of CHANDAMAMA PUBLICATIONS, Chandamama Buildings, Vadapalani, Madras 600 026 (India). Controlling Editor: NAGI REDDI.**


---

AMBULIMAMA (Tamil) August 1995 Regd. No. M. 4863